

இந்தியப் புராதனக் கதைகள்

22



நவீன வேதாளக் கதை

15



மர்மக்குளம்

9



விநாயகர்

61

## பொருளடக்கம்




SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
to

Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர
மற்ற எல்லா நாடுகளுக்கும்
விமானத் தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/-
இந்தியாவிற்குள் ரூ.120/-
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத் தொகையை
டி.டி வாயிலாகவோ
அல்லது மணியார்டரிலோ
**சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற
பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# நினைவு கூர்வோம் மாபெரும் ஆதர்சவாதியை

இந்தியா சுதந்திரம் அடைந்தபின் பல துறைகளில் பெரும் முன்னேற்றங்கள் அடைந்துள்ளது. இதற்காக நாம் தாராளமாகப் பெருமைபட்டுக் கொள்ளலாம். அதே சமயம் வேறு சில நாடுகள் எத்தகைய இன்னல்களைச் சந்தித்தும் போராட்டங்களை நடத்தியும் அவை அடைந்த பலன்களைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். நாம் சுதந்திரம் அடைந்தபோது ஜப்பான் எல்லாவற்றையும் இழந்து படுமோசமான நிலையில் இருந்தது. இன்று அது உயர்ந்து இருப்பது அதிசயத்திலும் அதிசயம்.

இந்தியா பரந்து கிடக்கும் பெரிய நாடே. நாம் நம்மை எந்தக் குறுகிய வாதத்திலும் கட்டிப் போட்டுக் கொள்ளவில்லை. நாம் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டுச் செல்ல வேண்டுமா அல்லது அதிகார ஆசை பிடித்து நமக்குள் சண்டை சச்சரவுகளைச் செய்து கொண்டே இருக்க வேண்டுமா? நாம் ஆட்சியைக் கைப்பற்றினால்தான் நாட்டிற்குப் பணிபுரிய முடியும் என்ற நினைப்பில் தான் இருக்கிறோம். ஆட்சி பீடத்தில் அமராமலேயே ஆயிரம் வழிகளில் நாம் நாட்டிற்கு நற்பணிகளைச் செய்ய முடியும். ஜனநாயகத்தின் உயர்நெறிகளைக் கடைப்பிடிக்கவும், லஞ்ச ஊழல்களைக் களைந்து எறியவும், யாவரையும் அணைத்துக் கொண்டு வாழ்ந்தும், வாழவிட்டும் வாழ்க்கையை உயர்த்தவும் செயல்படுவதே நம் குறிக்கோளாக இருக்க வேண்டும். இக்குறிக்கோள்களுடன் நடந்து வழிகாட்டிய நம் தலைவர்களில் கடைசியானவர் ஜெயபிரகாஷ் நாராயண். ஆட்சி பீடத்தில் அமராமலேயே மக்களின் மதிப்பைப் பெற முடியும் எனக் காட்டியவர் அவர்.

நூறு ஆண்டுகளுக்குமுன் பிறந்த அவரை நாம் நினைவுபடுத்திக் கொண்டு அவர் காட்டிய வழியில் நாட்டைப் பாழ்படாதவாறு உயர்த்துவோம். நாட்டிற்காக தம் குரலை அவர் உயர்த்தியது இப்போதும் நம் காதுகளில் ஒலித்துக் கொண்டே இருக்கிறது.

Visit us at : http://www.chandamama.org
ஆசிரியர் : விஸ்வம்

**இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்**

# இந்திய மாவீரர்கள் - 22

**நம் நாட்டு இலக்கிய மேதைகள் பற்றிய வினாக்கள் இவை. நீங்கள் இவர்களை அறிவீர்களா?**

முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்*



1. நான் ஆங்கிலத்தில் எழுதும் முன் வரிசை எழுத்தாளன் என் படைப்புகளை கூலி, அன்டச்சபில், டூ லீவ்ஸ் அண்ட் ஏ பட். நான் யார்?

---

2. நான் ஹிந்தி கவிஞன். மதுசாலா புகழ்பெற்ற என் படைப்பு. என் பெயர் தெரியுமா?

---

3. நான் தமிழ் புரட்சிக் கவிஞன். பெரும்பாலான என் பாடல்கள் சமூக சீர்திருத்தக் கருத்துக்கள் கொண்டவை. எனது படைப்புகளில் ஒன்று குடும்ப விளக்கு. நான் யார்?

---

4. நான் வங்கமொழி எழுத்தாளன். தேவதாஸ், சரித்திரஹீன் என்ற நாவல்களை எழுதியவன். நான் யார்?

---

5. 'கயறு' என்னும் நாவலுக்கு 1984ல் ஞானபீட விருது பெற்றேன். மற்றும் 'செம்மீன்' என்ற எனது நாவல் திரைப்படமாக்கப்பட்டு நன்கு ஓடியது. நான் யார்?

---

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியத் தலைவர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த இலக்கிய மேதை ........................

........................................................

........................................................

போட்டியாளரின் பெயர்: ........................

வயது: .................... வகுப்பு: ....................

முகவரி: ........................

........................................................

பின்கோடு: .................... போன்: ....................

போட்டியாளரின் கையொப்பம்: ........................

பெற்றோரின் கையொப்பம்: ........................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி - 22**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி ஆகஸ்ட் 5, 2003

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.





# வீணாவும் கார் சவாரிகளும்

சிறுமி வீணா நான்கு அடுக்குமாடி வீடு ஒன்றில் குடியிருந்தாள். அவளுடைய தந்தையும் அக்கட்டடத்தில் வசிக்கும் மற்றவர்களும் ஒரே அலுவலகத்தில் பணி புரிபவர்கள். அவர்கள் அனைவரும் தம் அலுவலகத்திற்குத் தம் கார்களில் சென்று வருபவர்கள்.



ஒருநாள் வீணா தன் தந்தையிடம், ''தந்தையே, உலகில் பெட்ரோல் மிகவும் விலை உயர்ந்தது என்றும் அதை வீணாக்கக் கூடாது என்றும் என் பள்ளியில் போதிக்கிறார்கள். அதனால் நீங்கள் எல்லோரும் ஒரே காரில் அலுவலகத்திற்குப் போய் விட்டுத் திரும்பி வரலாமே! இதனால் பெட்ரோலை நிறைய மிச்சப்படுத்தலாமே! நீங்கள் எல்லோரும் ஒரே அலுவலகத்திற்குத் தானே போகிறீர்கள்?'' என்று கூறினாள்.

வீணாவின் தந்தை அதுபற்றி யோசித்தார். ஆம், அவள் சொல்வது சரியே! ஒரே காரில் எல்லோரும் போனால் பெட்ரோலை மிச்சப்படுத்துவதோடு பணத்தையும் மிச்சப்படுத்தலாம்.

இப்போதெல்லாம் வீணாவின் தந்தையும் அவரது அக்கம்பக்க வீட்டுக்காரர்களும் ஒரே காரில் அலுவலகம் போய் வருகிறார்கள். தினமும் ஒருவர் கார் முறை போடப்பட்டுச் செல்கிறது. வீணாவின் புத்திசாலித்தன யோசனையால் அவர்கள் பெட்ரோலை வீணாக்காமல் மிச்சப்படுத்தி வருகிறார்கள்.

இதுபோல் நீங்களும் எரிபொருளை மிச்சப்படுத்த வழி கூறலாம்.

பெட்ரோலியம் உலகிலேயே மிக விலை மிக்கதாய்க் கிடைப்பது. ஆனால் குறைந்த அளவில் அது கிடைப்பதால் அதை மிச்சப்படுத்தி உலகிற்கு உதவுவோம்.

# அவசரக் குடுக்கை

குரிச்சியிலுள்ள அங்கப்பனுக்கு அந்த ஊரார் அவசரக் குடுக்கை என்று பெயர் வைத்திருந்தார்கள். ஏனெனில் அவன் எந்த வேலையும் 'குடுகுடு' என்று அவசர அவசரமாகச் செய்துவிட்டு விழிப்பான். அப்படிச் செய்யும் வேலையால் அவன் எதிர்பார்க்கும் பலன் கிடைப்பதில்லை.

காவேரி ஆற்றின் தென்கரையின் குரிச்சிக்கு நேர்எதிரே வடகரைமுத்தூரில் அங்கப்பனின் மகள் அகிலா தன் கணவன் வீட்டில் வாழ்ந்து வந்தாள். அங்கப்பன் அவ்வப்போது அவளுக்குப் பிடித்தமானவற்றைக் கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வருவது வழக்கம். ஒருமுறை அவன் தன் மகளுக்குக் கொடுக்க சில பொருட்களை ஒரு கூடையில் போட்டு எடுத்துக் கொண்டு குரிச்சியின் படகுத் துறைக்குக் கிளம்பினான். அப்போது படகு நடு ஆற்றில் இருப்பதைக் கண்ட அவன், ''அடடா! படகு முத்தூருக்குப் போய்க் கொண்டிருக்கிறதா? இதைத் தவறவிட்டால் இன்னமும் மூன்றுமணி நேரம் அல்லவா படகுத் துறையில் காத்துக் கொண்டிருக்க வேண்டி வரும். எனவே ஆற்றில் நீந்திப் படகை அடைகிறேன்,'' என எண்ணித் தலையில் சும்மாடு கட்டி அதன் மீது கூடையை வைத்துக் கொண்டு ஆற்றில் நீந்திப் படகை அடைந்து அதில் ஏறிவிட்டான்.

அப்போது குரிச்சியில் அவனது எதிர்வீட்டுக்காரனான குப்புசாமி அப்படகில் இருந்தான். அவன் அங்கப்பனைப் பார்த்து, ''என்னப்பா உன் மகள் ஊர் முத்தூருக்கா போகப் போகிறாய்? அவசரப்பட்டு நீந்தி இங்கே வந்து படகில் ஏறிவிட்டாயே. நீ நம் ஊர்ப் படகுத் துறையிலேயே இருந்திருக்கலாமே. இப்போது படகு குரிச்சிக்குத் தானே போய்க் கொண்டிருக்கிறது,'' என்றான். அதைக் கேட்டு அங்கப்பன் திகைத்துப் போனான்.





# மர்மக் குளம்

## 17

*(மர்மக்குள மகேஸ்வரன் மனித மாமிசம் உண்ணும் காடர்களிடம் அகப்பட்டு விட்டான். அப்போது சித்தசாதகன் வரவே மகரகேது தன் எஜமானனைக் காப்பாற்றும் முயற்சியில் ஜலவிருகனை காயப்படுத்தினான். காடர்கள் அங்கு வந்தவர்களை எல்லாம் பிடிக்க முயலவே, அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து காடர்களைத் தாக்கினார்கள். அச்சமயத்தில் சில குதிரைவீரர்கள் அங்கு வந்தார்கள். அப்போது -)*

சித்தசாதகன் தன் கூரான ஈட்டியை மர்மக்குள மகேஸ்வரனின் மார்பின் மீது வைத்து மிரட்டவே அவன் பயந்து ''இது அநியாயம். ஒரு சுத்த வீரன் தன் எதிரியைச் சிறை பிடித்த பின் அவனைக் கொல்ல மாட்டான்,'' என்றான்.

அதைக் கேட்டதும் சித்தசாதகன், ''ஆம். நான் சுத்த வீரன்தான் உன்னைக் கொல்லமாட்டேன்,'' எனக் கூறி நீட்டிய ஈட்டியைப் பின்னுக்கு இழுத்து நிறுத்தினான். அதைக் கண்ட மகேஸ்வரன் பலமாகச் சிரித்தான். அவன் மகரகேதுவைப் பார்த்து, ஏதோ சொல்லப் போகையில் குதிரைப் படைத்தலைவன் அங்கு வந்து ' குதிரையிலிருந்து இறங்கினான்.

அவனைக் கண்ட சித்தசாதகன் கோபத்தோடு ''யார் நீ? இங்கு ஏன் வந்தாய்?'' என்று கேட்டான். படைத் தலைவன் சுற்றிலும் பார்த்தான்



மனிதக் குரங்கையும் நீர் யானையையும் கண்டதும் அவனது கை கால்கள் நடுங்கின. மெதுவாக சமாளித்தவாறே அவன் ''நான் யார் என்பதை முன்பே கூறிவிட்டேனே தெரிந்து கொள்ளவில்லையா?'' என்று கேட்டான்.

சித்தசாதகனோ, ''நான் சரியாகக் கேட்கவில்லை. இந்த மகேஸ்வரன் தப்பி ஓடிவிடாமல் பார்த்துக் கொண்டே இருந்துவிட்டேன். இப்போது இன்னொரு முறை சொல். நீ யார்? நீ ஏறி வந்தது குதிரையா அல்லது கோவேறு கழுதையா?'' என்று பரிகாசமாகக் கேட்டான்.

குதிரைப் படைத் தலைவன் அந்தக் கேள்விக்கு விடை அளிக்காமல் சாதகனை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு ஏதோ நினைவிற்கு வந்தது போல ''ஓ! நீயா? சித்த சாதகனா? கொலைக் குற்றத்திற்காக ஹிரண்யபுர மன்னன் முன் உன்னை இழுத்துப் போய் நிறுத்தினார்களே. அது இப்போது என் நினைவிற்கு வந்துவிட்டது. ஆமாம், உன்னோடு வந்த ஜெயசீலன் எங்கே?'' என்று கேட்டான்.

சாதகனும், ''ஜெயசீலன் அன்னப் பறவை ரதத்தில் அமர்ந்து ஆகாயத்தில் பறந்து கொண்டிருக்கிறான். நீ சற்று நகர்ந்து நில். இந்த மகேஸ்வரனை ஒரு கை பார்க்க வேண்டும்,'' என்றான். அவனோ, ''இங்கே யாரும் யாரையும் தாக்கக் கூடாது. வீரர்களே! இவர்களைச் சூழ்ந்து நில்லுங்கள்,'' என்று கூவினான். வீரர்களும் அவர்களைச் சுற்றி நின்றார்கள்.

அப்போது சித்தசாதகன், ''பேஷ், பேஷ்! மனித மாமிசத்தை உண்ண இங்கு காடர்கள் துடித்துக் கொண்டு இருக்கிறார்கள். இப்போது நீ உன் வீரர்களை அவர்களுக்கு இரையாக்கப் போகிறாய்,'' என்றான்.

படைத்தலைவனோ, ''இப்படியெல்லாம் சொல்லி என்னை பயமுறுத்த முடியாது. எங்கள் மன்னர் இங்கே முகாமிட்டிருக்கிறார். உங்களை எல்லாம் இழுத்துக் கொண்டு அவர் முன் நிறுத்தப் போகிறேன். உம், கிளம்புங்கள். இது என் கட்டளை,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகன், ''நான் என் மகாகாலரின் கட்டளையைத் தவிர வேறு யார் கட்டளைக்கும் கட்டுப்பட மாட்டேன். தெரிந்ததா?'' என்று கோபமாகக் கூறினான்.

குதிரைப் படைத் தலைவனிடம்

தன் எஜமானன் கோபமாகப் பேசு வதைக் கேட்ட ஜல விருகன் சட்டெனத் தன் கல்கதையைத் தூக்கிக் கொண்டு காலைத் தூக்கி பலமாய்த் தரையை மிதித்து கர்ஜித்தான். மனிதக் குரங்கும் அதனோடு சேர்ந்து பலமாக உறுமியது. திடீரென ஏற்பட்ட இந்த சத்தத்தால் ஒரு குதிரை வீரனின் குதிரை மிரண்டு தன் முன்னங்கால்களை உயர்த்தவே அதன் மீதிருந்த வீரன் தரை மீது உருண்டு விழுந்தான். குதிரை அங்கிருந்து ஓடியே போய்விட்டது.

இதைக் கண்ட குதிரைப் படைத் தலைவன் பணிவாக, ''ஐயா! நீங்கள் வந்து எங்கள் மன்னரைக் கண்டு பேசுங்கள். இது கட்டளை அல்ல. என் வேண்டுகோள்,'' என்றான்.

சித்தசாதகனும், ''அப்படி வா வழிக்கு, சரி, மன்னரைக் காண வருகிறேன். இந்தக் காடர்களையும், மர்மக்குள மகேஸ்வரனையும் நாம் இழுத்துப்போய் மன்னன் முன் நிறுத்த வேண்டும்,'' என்று கூறிய வாறே சுற்றிலும் பார்த்தான்.

அப்போது மகேஸ்வரனும் மகரகேதுவும் அங்கே இல்லாததைக் கண்டு அவன் ''ஆஹா! அந்தப் பயல்கள் தப்பி ஓடிவிட்டார்களா?'' என்று கூவினான்.

அப்போது காடர்கள் பலமாகச் சிரித்தார்கள். அவர்களது தலைவனான காட்டானும் கிழப் பூசாரியும் வந்து சித்தசாதகன் முன் நின்று ''நீ இந்தக் குதிரைப் படைத் தலைவனிடம் வாக்குவாதம் செய்து



கொண்டிருக்கையில் அவர்கள் இருவரும் ஓடிவிட்டார்கள். ஆனால் ஆலமர ஆண்டவன் அவர்களை எங்களுக்கு இரையாகும்படி அனுப்பியதால் அவர்களைப்பிடித்து வரும்படி என் ஆட்களை அனுப்பி இருக்கிறேன்,'' என்றான்.

சாதகனோ, ''அவர்கள் தப்பி ஓடுவதை என்னிடம் ஏன் கூறவில்லை? அவர்கள் அகப்படும் வரை நான் உங்களை விடமாட்டேன். ஜல விருகா! இவர்களைப் பிடித்துக் கட்டி ஒரு குதிரை மீது போடு,'' என்றான்.

ஜலவிருகன் சட்டெனத் தாவி காட்டானையும் கிழப்பூசாரியையும் பிடித்துக் கட்டி ஒரு குதிரைமீது ஏற்றினான். அப்போது சித்தசாதகன் குதிரைப் படைத்தலைவனிடம், ''சரி, நீ முன்னால் போ. நான் உன் பின்னாலேயே இதோ வருகிறேன்,'' என்றான்.



பிறகு அவன் காடர்களைப் பார்த்து, "அடே, மூட ஜடங்களே! உங்கள் ஆட்கள் மகேஸ்வரனுக்கும் மகரகேதுவுக்கும் ஏதாவது கெடுதல் செய்தால் உங்கள் தலைவன் காட்டானையும் கிழப் பூசாரியையும் உயிரோடு பார்க்கமாட்டீர்கள்!" என்று எச்சரித்தான்.

காடர்கள் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்து தம் தலைவன் காட்டானையும் கிழப் பூசாரியையும் பார்த்தனர். அவர்களோ, "ஆலமரத்து ஆண்டவனே! இந்த அக்கிரமக்காரர் களிடமிருந்து எங்களைக் காப் பாற்றுங்கள்," என்றுக் கதறினார்கள்.

சித்தசாதகன் அவர்களை லட் சியம் செய்யாமல் தன் வாகனமாகிய மனிதக்குரங்கின் மீது ஏறிக் கொண் டான். குதிரைப் படைத்தலைவன் வழிகாட்ட அவன் மன்னனைப் பார்க்கச் சென்றான்.

இதே சமயம் காட்டின் வேறொரு பகுதியில் ஜெயசீலன் தன் நண்பர் களுடன் ஆகாயத்தில் அன்னப் பறவை ரதத்தில் போய்க் கொண் டிருந்தான். அப்போது அவர்கள் ஓரிடத்தில் ஒரு புலி ஒரு இளம் பெண்ணைத் துரத்திக் கொண் டிருப்பதைப் பார்த்தார்கள். அவள் புதர்களிடையே புலிக்கு அகப் படாமல் ஓடி ஒரு மரத்தை அடைந்து அதன் கிளைகளைப் பற்றிக்கொண்டு உயரத்தில் போய்விட முயன்று கொண்டிருந்தாள். ஜெயசீலனுடன் ரதத்தில் சென்று கொண்டிருந்த தேவசர்மன் தான் முதலில் அதைப் பார்த்தான்.

அவன் ஜெயசீலனிடம், "ஜெய சீலா! புலியிடமிருந்து தப்பி ஓடும் அந்த இளம்பெண்ணை உற்றுப்பார். மர்மக்குள மகேஸ்வரன் கவர்ந்து சென்ற கனகாட்ச மன்னனின் மகள் காஞ்சனமாலைதான் அவள். தெரிந் ததா?" என்றான்.

ஜெயசீலனும், "ஆமாம். இப் போது இந்த ரதத்தைத் தரையில் இறக்க வேண்டும். தேரோட்டி! உடனே ரதத்தைக் கீழே இறக்கு!" என்றான்.

தேரோட்டியும் கீழே பார்த்து விட்டு "ஐயா இங்கே இறக்க முடியாது. சற்றுத் தள்ளி திறந்த வெளி உள்ளது அங்கு கொண்டுபோய் இறக்குகிறேன்," என்றான்.

ஜெயசீலன் கோபத்தோடு, "நீ ரதத்தை அங்கே கொண்டுபோய் இறக்குவதற்குள் புலி அந்தப்

பெண்ணைக் கொன்றுவிடும். நீ இங்கே ரதத்தைக் கொஞ்சம் தாழ்த்திப் பறக்கவிடு. நான் இதிலிருந்து ஏதாவது ஒருமரத்தின் மீது குதித்து அந்தப் பெண்ணைக் காப்பாற்றுகிறேன்'' என்று இரைந்தான்.

தேரோட்டியும் ஜெயசீலன் கூறிய படியே ரதத்தைத் தாழ்வாகப் பறக்க விட்டான். ஜெயசீலனும் அந்த ரதத்திலிருந்து குதித்து ஒரு மரத்தின் கிளையைப் பற்றினான். ஆனால் அது வலுவான கிளையாக இல்லாததால் ஒடிந்துபோயிற்று. அதனால் ஜெய சீலன் நாற்பதடி கீழே போய் விழுந்தான். நல்லவேளையாக அவன் விழுந்த இடத்தில் புல் அடர்ந்து முளைத்திருந்ததால் அவனுக்கு காயம் எதுவும் ஏற்படவில்லை.

கிளை ஒடிந்து ஏதோ சத்தம் ஏற்பட்டதைக் கேட்டு அரசகுமாரியைத் துரத்திக் கொண்டிருந்த புலி கீழே விழுந்த ஜெயசீலனைப் பார்த்தது. அந்த சொற்ப நேரத்தில் காஞ்சன மாலை தான் ஏற முயன்ற மரத்தின் ஒரு கிளையைப் பற்றி உயரே போகலானாள்.

அப்போது புலி திரும்பி அவள் மீது பாயவே, ஜெயசீலன் சட்டென அதன் மீது விழுந்து அதன் பின்னங் கால்களைப் பிடித்து இழுத்து தூரத்தில் தள்ளினான்.

காஞ்சனமாலை ஒருவழியாக மரத்தின் உயரமான இடத்திற்குப் போய்விட்டாள். அவள் ஜெய சீலனைப் பார்த்து, ''ஐயா! தக்க சமயத்தில் வந்து என்னைக் காப்



பாற்றினீர்கள். மிக்க நன்றி!'' என்றாள். ஜெயசீலன் அப்போதுதான் காஞ்சனமாலையை நன்கு பார்த்தான். அரசகுமாரியின் அழகு அவனை பிரமிக்க வைத்தது. ஆமாம். இவள் மட்டும் இருக்கிறாள். இவளது அண்ணன் காஞ்சன வர்மன் என்ன ஆனான்?

ஜெயசீலன் அவளைப் பார்த்து, ''நீ காஞ்சனமாலை என்றும் இந்த நாட்டு அரசகுமாரி என்றும் நான் அறிவேன். உன் அண்ணன் காஞ்சன வர்மன் எங்கே இருக்கிறான்? அன்னப் பறவை ரதத்திலிருந்து கீழே விழுந்த நீ எப்படி உயிர் தப்பி வந்தாய்?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட காஞ்சனமாலை ஆச்சரியம் அடைந்தாள். இந்த இளைஞனுக்குத் தன் பெயரும் தன்னைப் பற்றிய விவரமும் எப்படித் தெரிந்தது என்று யோசித்து

வியப்புடன் அவனைப் பார்த்தாள்.

ஜெயசீலனும், ''சரி, நடந்தது என்ன?'' என்று கேட்க, அவளும் ''அன்னப்பறவை ரதத்திலிருந்து என்னோடு மர்மக்குள மகேஸ்வரனும் அவனது தேரோட்டியும் கீழே விழுந்தார்கள். அவர்களும் இப்பகுதியில் எங்கோதான் இருக்க வேண்டும். என் அண்ணன் மர்மக் குள மாளிகைக்குள்தான் இருக் கிறான்,'' என்றாள்.

அப்போது ஜெயசீலன், ''அந்த மர்மக்குள மகேஸ்வரனைப் பற்றி ஓரளவு எனக்குத் தெரியும். அவனது ஆட்களில் சிலரையும் நான் பார்த் திருக்கிறேன். உன் அண்ணனை மர்மக்குள மாளிகையிலிருந்து விடு விக்க வேண்டும். அங்கு போவதற் கான வழியை நீ அறிந்துதான் இருப் பாய். முதலில் இப்பகுதியிலுள்ள என் நண்பன் சித்தசாதகனைக் கண்டு பேச வேண்டும்,'' என்றான்.

இதற்குள் தூரமாய் விழுந்த புலி உறுமிக்கொண்டு பாய்ந்து வரவே ஜெயசீலன், ''இதை இப்படியே விட்டுவிட்டால் ஆபத்து. இதைக் கொல்ல வேண்டும்,'' எனக் கூறி அதனை எதிர்த்தான்.

இதனை மறைந்திருந்து மர்மக் குள மகேஸ்வரனும் மகரகேதுவும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். மகேஸ்வரன் மகரகேதுவிடம், ''இந்த ஜெயசீலனைப் பிடிக்க இதுவே சரியான சமயம். நீ தாமரைத் தண்டுகளாலான கயிறை அவன் கழுத்திற்குக் குறி வைத்து வீசி அவனை இழு!'' என்றான்.

மகரகேதுவோ, ''இந்த ஜெயசீலன் சாமானியப்பட்டவன் அல்ல. அத னால் இவனைப் பகைத்துக் கொள்ள வேண்டாம்,'' என்று கெஞ்சும் குரலில் கூறினான்.

மகேஸ்வரனோ, ''நீ பயப்படு கிறாயா? கயிறை இங்கே கொடு! நான் அதை வீசி இழுக்கிறேன்,'' எனக் கூறினான்.

அவனிடமிருந்து கயிறை வாங்கிக் கொண்டு ஜெயசீலனின் கழுத்தில் போய் விழ அதை எறிந்தான்.

*(தொடரும்)*



நவீன
வேதாளக்
கதை

# கல்விக்குக் கரையா?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அத னுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னா! இந்த பயங்கர நள்ளிரவில் நீ ஏன் இப்படி விடாது முயற்சி செய் கிறாய்? ஏதோ ஒரு விஷயத்தை மட்டும் தெரிந்து கொண்டு எல்லாம் தெரிந்துவிட்டதாக எண்ணிய காசிநாதன் போல நீ இல்லையே? எதற்கும் அவன் கதையைக் கூறுகிறேன். கவன மாகக் கேள்!'' என்று கதை சொல்ல ஆரம்பித்தது.



கோமதி நதிக்கரையிலுள்ள கோவிலூரில் காசிநாதன் என்ற சிறுவன் இருந்தான். அவன் படிப்பிலும் விளையாட்டுகளிலும் அவ்வூரில் யாவருக்கும் முன்னதாக விளங்கியதால் எல்லோரும் அவனை கெட்டிக்காரன் என்று புகழ்ந்தார்கள்.

ஒரு சிலர் அவனது தந்தையிடம், ''உன் மகனை வித்தியாநாதரிடம் அனுப்பு. அவரிடம் எல்லாவற்றையும் நன்கு கற்றுக் கொள்ளட்டும்,'' என்றார்கள்.

அதைக் கேட்ட காசிநாதன் தன் தந்தையிடம், ''யாரப்பா இந்த வித்தியாநாதர்? என்னைவிட எல்லாவற்றிலும் மேலானவரா?'' என்று கேட்டான்.

அவனது தந்தையும் ''அவர் நிறையப் படித்தவர். அவரிடம் கல்வி பயின்ற பலர் இன்று ஆட்சியில் அமர்ந்திருக்கிறார்கள்,'' என்றான். அப்போது காசிநாதன், ''அவ்வளவு திறமை பெற்றவரானால் அவரே ஆட்சி புரியலாமே!'' என்று கிண்டலாகக் கேட்டான்.

அவனது தந்தையும் ''பெரியவர்களைப் பற்றி இப்படி எல்லாம் கேலியாகப் பேசக் கூடாது. அவர் கற்காத துறையே இல்லை. புது விஷயம் ஏதாவது வந்தாலும் அதையும் கற்கிறார். அவரது ஒரே லட்சியம் தாம் கற்றுக் கொண்டதைப் பிறருக்குச் சொல்லிக் கொடுப்பதே!'' என்றான்.

காசிநாதனோ, ''இப்படியே வாழ்நாள் முழுதும் புதுப்புது விஷயங்களைக் கற்றுக் கொண்டே இருந்தால் எப்போதுதான் சுகப்படுவது? நான் கற்றுக் கொள்வது பணம் சம்பாதிப்பதற்காகத்தான். பணம் இருந்தால் தான் வாழ்க்கையில் சுகம் பெற முடியும். அவருக்கு எல்லாம் தெரியும் என்று கூறுகிறார்களே. அவருக்குத் தெரியாத ஒன்றை நான் கற்றுக் கொண்டு அவரைவிட நான் மேலானவன் என்று நிரூபித்து காட்டுகிறேன்,'' என்றான்.

அவனது தந்தையும், ''நான் நல்லதைத் தான் சொல்கிறேன். நீ கேட்க மாட்டேன் என்கிறாய். என்னவோ உன் இஷ்டப்படி செய்!'' என்று கூறினான்.

காசிநாதனும், ''நான் சொல்வதைச் செய்து காட்டுபவன் என்பது உங்களுக்கே தெரியும் அல்லவா?'' என்று கர்வத்தோடு கூறினான். அதன்

பிறகு அவன் வித்தியாநாதருக்குத் தெரியாத விஷயம் என்ன என்று ஆராயலானான். தன்னைச் சுற்றிலும் உள்ளவற்றை மிக உன்னிப்பாகப் பார்த்து வரலானான்.

காசிநாதனின் குடும்பத்திற்குச் சொந்தமான ஒரு மாந்தோப்பு அவனது ஊரின் எல்லையில் இருந்தது. அதன் மத்தியில் மாமரம் போல ஒரு மரம் இருந்தபோதிலும் அதன் காய் மட்டும் எலுமிச்சை போலவும் தின்று பார்த்தால் பாகற்காய் போலக் கசப்பாகவும் இருந்தது. அந்த மரம் தோப்பிற்கு ராசியானது என்று அதை ஒன்றும் செய்யாமல் விட்டு வைத்திருந்தார்கள்.

ஒருநாள் ஒரு குரங்கு அந்த தோப்பிற்குள் நுழையவே, காசிநாதன் தோட்டக் காவலாளிகளை எச்சரித்து அதைத் தானே துரத்தலானான்.

குரங்கு அங்கும்இங்கும் ஓடி தோப்பின் மத்தியிலுள்ள விசித்திர மாமரத்தின் மீது ஏறியது. களைத்துப் போன அது அந்த மரத்தின் காய் ஒன்றைப் பறித்துத் தின்றது. மறு விநாடியே அது உற்சாகத்துடன் ஒரே தாண்டில் அந்தத் தோப்பின் வெளியே குதித்து வேகமாக ஓடிவிட்டது. அதைக் கண்ட காவலாளிகள் அந்தக் குரங்கு ஆஞ்சநேயரே எனக் கூறிக் கன்னத்தில் போட்டுக் கொண்டு விழுந்து வணங்கினார்கள்!

ஆனால் காசிநாதன் மட்டும் யோசித்து அந்த மரத்தின் காயில் ஏதோ ஓர் அபூர்வ சக்தி இருக்க வேண்டும் என்ற முடிவிற்கு வந்தான். உடனே அவன் அந்த மரத்தின் காய் ஒன்றைப் பறித்துத் தின்றுவிட்டு





தாவிப் பார்த்தான். தான் ஒரு புதிய சக்தியைப் பெற்றதாக அவன் உணர்ந்தபோதி லும் அவனால் அதிக தூரம் தாண்ட முடியவில்லை. அவன் பலமுறை முயன்று பார்த்தான். களைத்துப் போனானே தவிர அதிக தூரம் தாண்ட முடியவில்லை.

அப்போது அவன் குரங்கு மிகவும் களைத்துப் போய் அந்த மரத்தின் காயைத் தின்றுவிட்டுத் தாண்டியதை நினைத்துப் பார்த்தான். தானும் களைத்துப் போனதால் அதைப் போல ஒரு காயைச் சாப்பிட்டுப் பார்க்கலாம் என்று நினைத்து ஒரு காயைப் பறித்துத் தின்றான்.

அப்போது தன் உடலில் புதிய சக்தி வந்ததை உணர்ந்து உயர எம்பினான். ஆகா! அவனது உடல் லேசாகிப் பறவை போலப் பறக்க லானான். தாவ முயன்று குரங்கு தாவியதுபோல நீண்ட தூரத்தைத் தாண்டினான்.

காசிநாதன் எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தான். மனிதன் அனுமாரைப் போல நீண்ட தூரம் தாண்ட அவன் வழி கண்டுபிடித்துவிட்டான். அப் போது முதல் தான் அறிந்த புதிய வித்தையை ஊராருக்குச் செய்து காட்டினான். அதைக் கண்டு எல் லோரும் ஆச்சரியப்பட்டு அவனைப் புகழ்ந்தார்கள். அவனது புகழ் பக்கத்து கிராமங்களில் பரவியது.

ஒருநாள் அவன் தன் தந்தையிடம், "நான் கற்ற இந்த வித்தை உங்கள் வித்தியாநாதருக்குத் தெரியாதே! எனவே நான் அவரைவிட உயர்ந் தவன் தான்," என்று பெருமை அடித் துக் கொண்டான்.

அவனது தந்தையோ, "காசிநாதா! நீ ஒருபோதும் வித்தியாநாதருக்குச் சமமாக ஆகிவிட முடியாது. அவர் எவ்வளவோ சாஸ்திரங்களைக் கற்று குருகுலம் அமைத்து தாம் கற்றதை எல்லோருக்கும் சொல்லிக் கொடுக் கிறார். நீ அப்படிச் செய்கிறாயா?" என்று கேட்டான். காசிநாதனோ அதற்கு பதில் கூறவில்லை.

ஒருநாள் ஒரு முதியவர் காசி நாதனின் ஊருக்கு வந்து அவனிடமே, "இந்த ஊரில் காசிநாதர் என்பவர் எங்கே இருக்கிறார்?" என்று கேட் டார். காசிநாதனும், "நீங்கள் யார்? நான்தான் காசிநாதன்," என்றான்.

அதுகேட்டு அவர் "என் பெயர் வித்தியாநாதன். உங்களுக்குப் புதிதாக ஏதோ தெரியும் என்று கேள்விப்

பட்டேன். நான் தங்களது சீடனாக இருந்து அதைக் கற்றுக் கொள்ள விரும்புகிறேன்,'' என்றார்.

அதைக் கேட்டு திகைத்த காசிநாதன் ''நீங்கள் வித்தியாநாதரா? எல்லாம் கற்றவர் என்று உங்களைப் புகழ்கிறார்களே. இந்த ஒரு வித்தையைக் கற்பதற்காக என்னிடம் வர வேண்டுமா? எவ்வளவோ கற்ற உங்களுக்கு இது எதற்கு? உங்களுக்குத் தெரியாதது உலகில் எதுவுமே இருக்கக் கூடாது என்ற அகம்பாவமா?'' என்று கேட்டான்.

வித்தியாநாதரும் பணிவுடன், ''எனக்கு அகம்பாவம் இருந்திருந்தால் உங்களைத் தேடி இங்கே வந்திருப்பேனா? கற்பதற்கு எல்லையே இல்லை. நாம் கற்றுக் கொண்டே இருக்க வேண்டும். நான் கற்றுக் கொண்டதைப் பிறருக்குக் கற்றுக் கொடுப்பதே என் லட்சியம். எதையாவது கற்றுப் பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசை எனக்கு இல்லை,'' என்றார்.

அதைக் கேட்டு காசிநாதன் ஏளனமாகச் சிரித்து, ''மனிதன் குரங்கு போலத் தாவும் முறையை நான் கண்டுபிடித்தேன். அது ஒரு புதிய விஷயம். அதை நான் உங்களுக்கோ அல்லது வேறு யாருக்கோ ஏன் கற்றுக் கொடுக்க வேண்டும்? இதனால் என்னால் நிறையப் பணம் சம்பாதிக்க முடிகிறது. இந்த ரகசியம் என்னிடமே இருக்கட்டும். வேறு யாருக்கும் தெரிய வேண்டாம். அந்த வித்தை என்னோடு மறைந்து



விட்டால் யாருக்கு என்ன நஷ்டம் ஏற்பட்டுவிடப் போகிறது?'' என்று கேட்டான்.

வித்தியாநாதரும், ''ஆம். நஷ்டம் ஏற்படும் தான். மீன் நீரில் உயிருடன் இருக்கிறது. அது தரையில் விழுந்தால் துடிதுடித்து இறந்துபோகிறது. இமயமலையில் வாழும் கரடி பாலைவனத்தில் ஒரு விநாடி கூட இருக்க முடியாது. ஆனால் மனிதனுக்கு அப்படி இல்லை. அவன் நீரில் நீந்த வேண்டும். ஆகாயத்தில் பறக்க வேண்டும். எல்லாத் தட்பவெப்பநிலைகளிலும் எதிர்நீச்சல் போட வேண்டும். அதற்காகத் தான் கடவுள் மனிதனுக்கு மூளையைக் கொடுத்திருக்கிறார். இப்போது உங்களது இந்தப் புதிய கண்டுபிடிப்பை எடுத்துக் கொள்வோம். இந்த வித்தையை ஒருவன் தெரிந்து

கொண்டால் நதிகளைக் கடக்கலாம். எரியும் தீயில் இருந்து குதித்து உயிர் தப்பலாம். தம் தேவைக்கேற்ப இதை ஒருவர் பயன்படுத்திக் கொள்ள லாம். தாம் கற்றதை வாயாலும், நூல்களை எழுதியும் படித்தவர் என்பவர் பிறருக்கு கற்றுக் கொடுக்க வேண்டும்,'' என்றார்.

வித்தியாநாதர் இப்படிச் சொன் னதும் காசிநாதன் அவரது கால்களில் விழுந்து வணங்கி ''என்னை மன்னி யுங்கள். நான் உங்களோடு வந்து உங்கள் சீடனாக இருந்து நிறையக் கற்றுக் கொள்கிறேன். பிறகு எனக்குத் தெரிந்த இந்த ஒரே விஷயத்தை உங்களுக்கு குருதட்சிணையாக சமர்ப் பிக்கிறேன். என்னை உங்கள் சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள்,'' என்று வேண்டினான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''வித்தியாநாதரின் சீடனாக முதலில் மறுத்த காசிநாதன் பிறகு அவரது சீடனாக இருக்க ஏன் வேண்டினான்? தான் அவரைவிட உயர்ந்தவன் என்ற அவனது எண்ணம் ஏன் மறைந்து போயிற்று? இக்கேள்விக்குச் சரியான விடை தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்குநூறாகி விடும்,'' என்றது.

விக்கிரமனும், ''காசிநாதன் ஒரு விஷயத்தை மட்டும் தெரிந்து வைத் துக் கொண்டு அது வித்தியாநாதருக் குத் தெரியாததால் தானே அவரைவிட உயர்ந்தவன் என்று கர்வப்பட்டுக் கொண்டிருந்தான். ஆனால் வித்தியா நாதர் அவனைத் தேடிக் கொண்டு வந்து அவனுடன் பேசவே அவ ருக்குத் தெரிந்த விஷயங்கள் எல்லாம் தனக்குத் தெரியவே இல்லை என் பதை உணர்ந்தான். அதனால்தான் அவரிடம் தன்னை அவரது சீடனாக ஏற்கும்படி வேண்டினான். முன்பு அவன் கொண்டிருந்த அகங்காரம் வித்தியாநாதர் அவனோடு பேசிய பேச்சால் அடியோடு மறைந்து போயிற்று,'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்தப் பதிலால் அவனது மௌனம் கலை யவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# இதுதான் காரணம்!

கணபதியும் பசுபதியும் அண்டை வீட்டுக்காரர்கள். கணபதி பெரும் பணக்காரன். பசுபதியோ பரம ஏழை, பெரிய குடும்பஸ்தன். எப்போதும் ஏதாவது ஒரு நோயால் அவதிப்பட்டுக் கொண்டிருப்பவன். இவ்வளவு இருந்தும் அவன் ஆண்டுதோறும் தன் பிறந்த நாளை மகிழ்ச்சி ததும்பக் கொண்டாடியே வந்தான். அவன் தன் நண்பர்களுக்கு அன்று இனிப்பும் வழங்கி வந்தான்.

ஒருமுறை தன் பிறந்த நாளன்று பசுபதி இனிப்புகளைத் தன் நண்பர்களுக்குக் கொடுத்துக் கொண்டிருந்தான். அப்போது அவனது நண்பன் ராமலிங்கம், ''பசுபதி! எனக்கு ஒரு சந்தேகம். கேட்கட்டுமா?'' எனவே, பசுபதியும் ''ஆகா! தாராளமாகக் கேள்,'' என்றான். ராமலிங்கமும் ''உன் அண்டை வீட்டுக்காரன் கணபதிக்கு நிறையப் பணமும் இருக்கிறது. நோய், நொடி என்றில்லாமல் நன்றாகவே இருக்கிறான். ஆனால் அவன் ஒரு தடவை கூடப் பிறந்ததை நடத்தவே சிரமப்படுகிறாய். வைத்தியரிடம் அவ்வப்போது போய் மருந்தும் வாங்கிக் கொள்கிறாய். இப்படி உன் நிலை இருந்தும் சந்தோஷமாக உன் பிறந்தநாளை வருடா வருடம் கொண்டாடி வருகிறாய். அது எப்படி உன்னால் முடிகிறது?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட பசுபதி புன்னகை புரிந்து ''எப்படியா? நான் என் வாழ்வில் சிரமங்களும் கஷ்டங்களும் வருட காலத்திற்குக் குறைந்து போனதே என்று சந்தோஷப்பட்டே என் பிறந்த நாளைக் கொண்டாடுகிறேன். ஆனால் கணபதியோ தன் சுக வாழ்வில் ஒரு வருடம் குறைந்துவிட்டதே என்று துயரப்பட்டுத் தன் பிறந்த நாளைக் கொண்டாடாமல் இருக்கிறான். இதுதான் காரணம்!'' என்றான்.



# ஆசையால் அழிந்தவன்

சாது பாபா பல ஊர்களுக்குப் போய் அவ்வப்போது சியாம்பூரில் ஓரிரு நாட்கள் தங்கிச் செல்வது வழக்கம். அவர் எப்போதும் புண்ணியத் தலங்களுக்கே சென்று கொண்டிருந்தார். அவர் தம்முடன் ஓரிரண்டு மாற்றுடைகளையும் ஒரு பித்தளைச் செம்பையும் தம் தோளில் தொங்கும் பையில் போட்டு எடுத்துச் செல்வார். சாது பாபா சென்ற இடங் களில் எல்லாம் மக்கள் அவருக்கு உண்ண உணவை அளித்ததோடு பணத்தையும் காணிக்கையாகக் கொடுத்தார்கள்.

சில சமயங்களில் பாபா ஒரு தலத்திலிருந்து அடுத்த புண்ணியத் தலத்திற்குக் கிளம்பும்போது அவ் வூரரில் சிலர் அவரோடு சேர்ந்து அந்தத் தலத்திற்குப் போவது உண்டு. அவரோடு சேர்ந்து சென்றால் அதிகப் புண்ணியம் கிடைக்கும் என்பது அவர்களது நம்பிக்கை. சாதுவும் அவர்களுக்கு வழியில் களைப்பு தெரியாமல் இருக்கப் பல புராணக் கதைகளைக் கூறி மகிழ்விப்பார். சாது போகும் இடங்களில் அவருக்கு உணவு அளிப்பவர்கள் அவரோடு வந்தவர்களுக்கும்ட உணவு கொடுத்து வருவது வழக்கம்.

சியாம்பூரில் லல்லூசேட் பெரிய பணக்காரன். அவன் வியாபாரம் செய்து வந்ததோடு வட்டிக்குப் பணம் கொடுத்தும் வந்தான். அவன் கஞ்சத் தனத்திற்கும் பேராசைக்கும் பெயர் பெற்றவன்.

ஒருமுறை சாது சியாம்பூருக்கு



வந்துவிட்டு ஜகன்நாதபுரிக்குப் புனித யாத்திரையாகக் கிளம்பினார். அப் போது லல்லுசேட்டும் மற்றவர் களுடன் சேர்ந்து சாதுவோடு செல்ல வந்தான்.

அப்போது சாது, ''சேட்! உனக்கோ வயது அதிகம் ஆகிவிடவில்லை. ஏன் இப்போதே தீர்த்த யாத்திரை மேற்கொள்ள வருகிறாய்?'' என்று கேட்டார். லல்லுவும், ''சுவாமி! உங் களுக்கோ வயது அதிகமாகிவிட்டது. உங்களோடு செல்லும் பாக்கியம் இனிமேல் எனக்குக் கிடைக்குமோ என்னமோ என்றே இப்போது உங் களுடன் வருகிறேன்,'' என்றான்.

லல்லுசேட் புண்ணியம் பெற நினைப்பதோடு தன்னோடு வந்தால் உணவுச் செலவு மிஞ்சுமே என நினைப்பதை அவர் புரிந்து கொண்டு விட்டார். அது மட்டுமல்ல, அவ னோடு வரும் அந்த ஊர்க்காரர்கள் அவனது மூட்டைகளைச் சுமப்ப தோடு அவனுக்குப் பணிவிடைகளும் பயந்து கொண்டே செய்வார்கள்.

அப்போதும் சாது, ''சேட்! புனிதத் தலங்களுக்குப் போகும்போது ஆசா பாசங்களை விட்டுவிட்டு பகவானை நினைத்தபடியே செல்ல வேண்டும். லாப நஷ்டங்களைப் பற்றிய சிந் தனை கூடாது. உன்னால் இப்படி இருந்தவாறே வர முடியுமா?'' என்று கேட்டார்.

லல்லு சேட்டும், ''சுவாமி! ஒரு மாத காலத்திற்காவது என் குடும்பத் தொல்லைகளிலிருந்து விடுபட்டு இருக்க விரும்புகிறேன். அப்போது



என் மனைவியும் என் மகனும் குடும் பத்தை எப்படி நிர்வகிப்பார்கள் என்று பார்க்கவும் விரும்புகிறேன்,'' என்றான்.

சாதுவும் சிரித்தவாறே, ''ஓ! பல திட்டங்களைப் போட்டுத்தான் நீ இந்த யாத்திரையை மேற்கொள் கிறாயா? சரி, வா!'' என்றார். லல்லு சேட்டும் மற்றவர்களோடு சேர்ந்து சாதுவுடன் சென்றான்.

லல்லுவுக்கு சிரமம் இருக்க வில்லை. அவனது மூட்டைகளை அவனது ஊர்க்காரர்கள் மூவர் சுமந் தார்கள். அவனுக்குப் பணிவிடைகள் செய்தார்கள். சேட்டும் வழியில் இருந்த ஊர்களில் வியாபாரம் பற்றி விசாரித்துக் கொண்டே வந்தான். மற்றவர்கள் சாது சொல்லும் கதை களைக் கேட்டார்கள். ஆனால் லல்லு

அதை எல்லாம் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை.

ஓர் ஊர் அருகே போகும்போது அங்கு ஓடிக் கொண்டிருந்த ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஓடிக் கொண்டிருந்தது. அதில் பல பொருள் கள் மிதந்து வந்து கொண்டிருந்தன.

அப்போது லல்லு அதில் விலை யுயர்ந்த கம்பளம் ஒன்று மிதந்து வருவதைக் கண்டு தன் ஊர்க்காரன் ஒருவனிடம், ''நீ நீந்திப்போய் அந்தக் கம்பளத்தை இழுத்துக் கொண்டு வா!'' என்றான்.

அவனோ, ''எனக்கு நீந்தத் தெரி யாதே!'' என்றான். அதைக் கேட்ட லல்லு ''எவ்வளவு விலையுயர்ந்த கம்பளம். அதை விடக் கூடாது. நான் ஆற்றில் குதித்து நீந்தி அதை எடுத்து வருகிறேன்,'' என்றான்.

அதற்கு அருகில் இருந்த இன் னொருவன், ''சேட்ஜி! நீங்கள் இப்போது ஆற்றில் குதிக்காதீர்கள். நீரோட்டம் வேகமாகவும் சுழல் களோடும் பயங்கரமாக இருக்கிறது. அதில் யார் போனாலும் உயிரோடு திரும்பிவர முடியாது. எனவே நீங்கள் போகாதீர்கள்,'' என்று சொன்னான்.

சாதுவும் மற்றவர்களும் எவ்வளவு சொல்லியும் கேளாமல் லல்லு ஆற்றில் குதித்துவிட்டான். அவன் சிரமப்பட்டு நீந்தி அந்தக் கம்பளத் தைப் பிடித்தும்விட்டான். ஆனால் அவன் திரும்பிவர முடியாமல் தத்தளிக்கவே, சாது உரத்த குரலில் ''அதைப் பிடித்துக் கொண்டு வர முடியவில்லை என்றால் அதை விட்டுவிட்டு வந்துவிடு!'' என்று கத்தினார்.

லல்லுவோ, ''நான் என்னவோ அதை விட்டுவிட்டேன். ஆனால் அதுதான் என்னை விடாமல் பிடித்துக் கொண்டிருக்கிறது,'' என்று அழுது கொண்டே கூறினான். அதன் பிறகு அவன் பேசவே இல்லை.

லல்லுசேட் பிடித்தது கம்பளத்தை அல்ல, ஒரு கரடியைத் தான். வெள் ளத்தில் அது எப்படியோ சிக்கி மிதந்து கொண்டு வந்தது. லல்லுவை பிடித்ததும் அது விடவே இல்லை.

கம்பளத்திற்கு ஆசைப்பட்டு லல்லுசேட் தன்னுடைய உயிரையே இழந்தான்!








## பஞ்சாங்கம் பிறந்த இடம்

புதுடில்லியில் ஜந்தர்மந்தர் என்பது குறிப்பிடத்தக்க இடம். ஆனால் இது முதலில் ஜெய்ப்பூரில் மன்னர் சவாய் ஜெய்சிங் 250 ஆண்டுகளுக்கு முன் கட்டியதைப் போல அப்படியே அமைந்துள்ளது. ஜெய்ப்பூரிலுள்ள ஆராய்ச்சி நிலையத்தில் கல்லால் ஆன உப கரணங்கள் உள்ளன. இவற்றைக் கொண்டு நேரம், நட்சத்திரங்களின் அசைவுகள், கிரகங்களின் நிலைகள் ஆகியவற்றைக் கண்டுபிடிக்க முடியும். இந்த ஆராய்ச்சி நிலையத்தில் இப்போதும் ஆண்டுதோறும் வானவியல் நிபுணர்கள் கூடி இந்தியப் பஞ்சாங்கத்தை அந்தந்த ஆண்டிற்குக் கணிக்கிறார்கள். இவ்வாறு கணிக்க கற்களாலான இங்குள்ள உபகரணங்கள் பயன்படுகின்றன.

## லைசென்ஸ் வாங்காதிருக்க அனுமதி!

நம் நாட்டில் துப்பாக்கி போன்ற ஆயுதங்களை வைத்திருக்க லைசென்ஸ் பெற்றாக வேண்டும். ஆனால் கர்நாடகாவில் குடகில் வசிப்பவர்களுக்கு அது தேவை இல்லை. ஏனெனில் முன்பு குடகு தனி நாடாக இருந்தது. குடகு மக்கள் நன்கு போரிடுபவர்கள். அதனால் அப்போதைய ஆட்சியாளர்களான பிரிட்டிஷார் குடகு மக்கள் துப்பாக்கி போன்றவற்றை வைத்திருக்க லைசென்ஸ் வாங்கி வேண்டியதில்லை எனக் கூறிவிட்டார்கள். எனவே இன்றும் அவர்கள் லைசென்ஸ் வாங்கத் தேவையில்லை. இந்திய ராணுவத்தில் முதலாவது ஃபீல்ட் மார்ஷல் கே.எம். கரியப்பாவும் ஜெனரல் திம்மையாவும் குடகைச் சேர்ந்தவர்களே!





# தாய்க்குத் தெரியுமே!

முருகன் தன் சிறுவயதிலேயே தன் தந்தையை இழந்துவிட்டதால் அவனது தாய் அவனைப் படிக்க வைத்தாள். பன்னிரெண்டு வயதான தும் அவன் தன் தாயிடம், ''அம்மா! பள்ளிப்படிப்பு எனக்குப் போதும். நான் தொழில் கல்வி பயின்று தேர்ச்சி பெறுகிறேன். அது உனக்கும் உதவி யாக இருக்கும். என் எதிர்கால வாழ்க்கையை அமைத்துக் கொள்ளப் பயன்படும்,'' என்றான்.

தன் மகன் ஏதாவது தொழிலைச் செய்ய ஆர்வம் கொண்டுள்ளதைக் கண்டு அவனது தாய் மகிழ்ந்து போனாள். வாலிபனான முருகனும் தான் என்ன தொழிலை எங்கு ஆரம்பித்து நடத்தி வருவது என்று யோசித்துக் கொண்டிருந்தான். அப் போது அவனது ஊருக்கு தனசேகரன் என்ற பணக்கார வியாபாரி வந்தான். அவன் முருகனைக் கண்டு பேசி அவன் திறமைசாலி எனக் கண்டு கொண்டான்.

அவன் முருகனிடம், ''முருகா! நீ திறமை மிக்கவன் என்று தெரிகிறது. நீ என்னோடு என் ஊருக்கு வந்து என் வியாபாரத்தை கவனித்து வா. உனக்கு என் மகள் தங்கத்தையும் கல்யாணம் செய்து வைக்கிறேன். நீ வந்து அவளைப் பார்த்து உனக்குப் பிடித்திருக்கிறதா என்று சொல்!'' என்றான்.

அதைக் கேட்ட முருகன் தனக்கு அதிர்ஷ்டம் அடிக்கிறது என்றும் தான் பணக்கார வீட்டு மாப்பிள்ளையாகி எல்லா சுகபோகங்களையும் அனு பவிக்க போவதாகவும் எண்ணி பூரித்துப் போனான்.

முருகன் தனசேகரனுடன் அவனது ஊருக்குச் சென்றான். அரண்மனை போல பெரிய வீடு. நல்ல வியா பாரம். ஆனால் தனசேகரனுக்கு

- கௌரிநாதன் -

இவ்வளவு இருந்தும் அவளது மகள் தங்கம் பார்க்க விகாரமாயும் அரு ருக்கத் தக்கவளாகவும் இருந்தாள்.

தனசேகரனும், ''உனக்கு என் மகளைப் பிடித்திருந்தால் சொல். இப்போதே அவளை உனக்கு விவாகம் செய்து வைக்கிறேன். என் வீட்டிலேயே இருந்துவிடலாம்,'' என்றான்.

அதைக் கேட்ட முருகன் திடுக் கிட்டு, ''ஐயா! சிறுவயதிலேயே நான் என் தந்தையை இழந்துவிட்ட தால் என் தாயார் தான் சிரமப்பட்டு வளர்த்து படிக்க வைத்துப் பெரிய வனாக ஆக்கினாள். எனவே அவ ளைக் கேட்காமல் எதையும் நான் செய்யமாட்டேன். அதனால் நான் ஊருக்குப் போய் என் தாயாரைக் கலந்து ஆலோசித்துவிட்டு தங் களுக்கு பதில் சொல்கிறேன்,'' என்றுக் கூறினான்.

தனசேகரனும், ''சரி, அப்படியே செய். நீ என் மகளை மணந்து கொண்டால் உன் தாயாரும் உன் னோடு என் வீட்டில் சுகமாக இருக் கலாம் இதையும் அவர்களிடம் தெரிவி,'' எனக் கூறி அவனை அவ னது ஊருக்கு அனுப்பினான்.

முருகன் தன் ஊருக்குப் போய் தாயாரிடம் தனசேகரன் கூறியதைச் சொன்னான். அதைக் கேட்ட அவனது தாயார் ''இதோ பார். என் வீட்டிற்கு வரும் மருமகள் அழகானவளாக இருக்க வேண்டும். அவள் எவ்வளவு பணக்காரியாக இருந்தாலும் நான் அவளது வீட்டில் போய் இருக்க



மாட்டேன். அதனால் நீ இந்தத் திருமணத்திற்குச் சம்மதிக்காதே'' என்றாள். எனவே முருகன் தன சேகரன் கூறியதை ஏற்கவில்லை.

கொஞ்ச நாட்களுக்குப் பின் முரு கனின் தாய் அவனுக்கு மணம் செய்து வைக்க அழகான பெண்ணைத் தேர்ந் தெடுத்தாள். அவள் ஏழைதான். தன் மகனிடம் அவளையே மணக்கும்படி அவள் வற்புறுத்தவே அவனும் பூங் கோதை என்ற அந்தப் பெண்ணை மணந்து கொண்டான். பூங்கோதை பணம் இல்லாதவள். ஆனால் மிக வும் பணத்தாசை பிடித்தவள். அவள் தன் கணவனிடம் தினமும் தனக்குப் பட்டுப் புடவைகள் வேண்டும் என் றும் தங்க நகைகள் வேண்டும் என்று கூறி நச்சரிக்கலானாள்.

முருகன் தன் தாயாரிடம் கூறி



''பணக்காரப் பெண் விகாரமாக இருக்கிறாள் என்று இந்த ஏழைப் பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்தாய். இவளோ நகை, புடவை என்று என்னை நச்சரிக்கிறாள். பணத்திற்கு நான் எங்கே போவேன்?'' என்றான்.

முருகனின் தாயாரும் பூங்கோதையிடம் வீட்டின் நிலையைக் கூறி அதிக ஆசைப்படாதே என்றாள். பூங்கோதையோ ''இப்போது அனுபவிக்காமல் நான் வேறு எப்போது அனுபவிப்பதாம்? உங்கள் மகனுக்குத் திறமை இருக்கிறது. பட்டணத்திற்குப் போய் ஏதாவது தொழிலை ஆரம்பித்தால் கை நிறைய சம்பாதித்து நான் கேட்பதை வாங்கிக் கொடுக்கலாமே!'' என்றாள்.

முருகனின் தாயாரும் அது நல்ல யோசனையே என்று கூறி முருகனையும் பூங்கோதையும் பட்டணத்திற்கு அனுப்பினாள். ஆனால் அவள் தன் ஊரைவிட்டுப் போகவில்லை.

பட்டணம் சென்ற முருகன் என்ன தான் முயன்றாலும் ஒரு தொழிலைச் செய்ய முடியவில்லை. பூங்கோதையோ அவனைக் கையாலாகாதவன் என்று இடித்துக் கூறலானாள். இதனால் மனம் நொந்த முருகன் தன் மனைவியிடம், ''என்னால் தான் முடியவில்லை. நீதான் ஒரு வழிசொல்'' என்றான்.

பூங்கோதையோ, ''நான் பெண். என்னால் வேலை செய்ய முடியாது. நீங்களோ ஆண். நீங்கள்தான் ஏதாவது வேலை செய்து பணம் சம்பாதித்துக் கொண்டு வரவேண்டும். அப்படி எதுவும் உங்களால் செய்ய முடியாது என்றால் உங்கள் ஊருக்கே போய் விடலாமே!'' என்று கேலியாகக் கூறினாள்.

முருகனால் எதுவும் கூற முடியவில்லை. தன் ஊருக்குப் போக அவன் தீர்மானித்தபோது அவன் நோய்வாய்ப்பட்டான். வைத்தியர் வந்து அவனைப் பார்த்து எத்தனையோ மருந்துகள் கொடுத்தும் அவனது நோய் குணமாகவில்லை.

ஆனால் பூங்கோதையோ, ''பணமும் இல்லை. நோயும் வந்து செலவு வேறு! இதென்ன வாழ்வு வேண்டிக் கிடக்கிறது?'' என்று மிகவும் அலுத்துக் கொண்டாள்.

வைத்தியரிடம் அவள், ''இவரது நோயை எப்போது குணப்படுத்து

வீர்கள்?'' என்று கேட்டாள். வைத்தியரும் ''இது உடல் சம்மந்தப்பட்ட நோயாகத் தெரியவில்லை. மனம் தொடர்பான நோயாக இருக்கலாம். தாயின் மேற்பார்வையில் இருந்தால் சரியாகிவிடும். இந்த நிலையில் இவர்தம் ஊருக்குப் போவதைவிட இவரது தாயாரை இங்கே வர வழைப்பதுதான் நல்லது'' என்றார்.

பூங்கோதையோ வைத்தியரிடம், ''இவருடைய தாயார் வந்து என்ன கவனித்துக் கொள்ளப் போகிறார் கள்? நான் தான் வேளாவேளைக்கு மருந்துகளைக் கொடுத்தும் ஆகாரம் அளித்தும் வருகிறேனே. இது போதாதா?'' என்று கேட்டாள்.

வைத்தியரும், ''இது மனநோயாக இருக்கலாம் என்றேனே! அதை நீ சரியாகக் கேட்கவில்லையா? நீ உடனே இவரது தாயாரை இங்கே வரவழை, தாமதிக்காதே!'' என்றார்.

பூங்கோதை உடனே ஊருக்குச் செய்தி அனுப்பவே, முருகனின் தாயாரும் பட்டணத்திற்குத் தன் மகனைக் காண விரைந்து வந்தாள்.

தன் தாயாரைக் கண்டதும் முரு கன், ''அம்மா! நீ வந்து நல்லதாக நான்கு வார்த்தைகள் கூறினால் தான் என் மனம் ஆறுதல் அடையும். என் நோயும் குறைந்து கொண்டே போகும். இவள் தினமும் என் மனம் நோகும்படி ஏதாவது சொல்லிக் கொண்டே இருப்பதால்தான் என் நோய் குணமடையாமல் அதிகரித்துக் கொண்டே போகிறது'' என்றான்.

அவளும் ''கவலைப்படாதே!



நான் உன்னைப் பார்த்துக் கொள் கிறேன்,'' எனக் கூறி இதமான வார்த்தைகளால் அவன் மனதை மகிழ வைத்தாள்.

இரண்டு நாட்களில் அவனது நோய் மறைய அவன் உற்சாகத்துடன் காணப்பட்டான். வைத்தியர் பத் தியம் என்று சொல்லி நெய்யாலும் எண்ணெயிலும் தயாரிக்கப்படும் தின்பண்டங்களை முருகனுக்குக் கொடுக்கக் கூடாது என்று கூறி இருந்தார்.

தன் மகனின் உடல் பற்றி நன்கு அறிந்திருந்த முருகனின் தாயார் அவனுக்கு மிகவும் பிடித்தமான நெய் அதிரசத்தைச் செய்து கொடுத்தாள். அதை ஆவலுடன் உண்டான். அத னால் அவனது நோய் கூடப் போயே விட்டது. இதைக் கண்டு பூங்கோதை

ஆச்சரியப்பட்டாள். அப்போது முருகனின் தாயார் அவளைப் பார்த்து ''என்ன யோசிக்கிறாய்? நான் வந்து என் மகனிடம் நான்கு வார்த்தை பேசி அவன் சாப்பிடக் கேட்டதைச் செய்து கொடுத்ததும் இவனது நோய் எப்படி மாயமாய் மறைந்தது என்று யோசிக்கிறாயா?'' என்று கேட்டாள்.

பூங்கோதையும், ''வைத்தியர் மருந்து கொடுத்தும் பத்திய உணவு சாப்பிடச் சொல்லியும் இவரது நோய் குணமாகவில்லையே. ஆனால் நீங்கள் வந்து இவரிடம் பேசி இவருக்குப் பிடித்தமான தின்பண்டத்தைச் செய்து சாப்பிட வைத்ததும் இவரது நோய் போய்விட்டதே. இது எப்படி என்று தான் விளங்கவில்லை'' என்றாள்.

அதற்கு முருகனின் தாயார், ''ஒரு தாய் தன் குழந்தையைச் சிறுவயதிலிருந்து வளர்த்துப் பெரியவன் ஆக்குகிறாள். அதனால் அவளுக்குத் தன் மகனின் உடலிலுள்ள நிறைகுறைகளும், அவனது மன இயல்பும் நன்கு தெரியும். என் மகனைப் பிடித்திருப்பது மனநோய்தான் என்று எனக்குப் புரிந்துவிட்டது. நீ அவனைக் குறை கூறி அவன் மனதை நோகடித்தாய். அவனது தேவைகளை கவனிக்கவில்லை. நான் இன்சொல் கூறி அவனுக்கு உற்சாகம் அளித்தேன். அவன் விரும்பியதைக் கொடுத்தேன். அவனது நோய் மறைந்தது. இனிமேலாவது அவனை உற்சாகப்படுத்தி வேலை செய்யச் சொல். அவன் விரும்புவதைச் செய்து கொடு!'' என்றாள்.

பூங்கோதையும், ''ஆம். நான்தான் தவறு செய்துவிட்டேன். இவரை சொற்களால் உற்சாகம் ஊட்டாமல் தினமும் ஏதாவது குறை கூறிக் கொண்டே இருந்தேன். அதனால் இவர் மனம் நொந்து நோயாளியாகி விட்டார். இனி ஒருபோதும் இப்படிச் செய்யமாட்டேன்,'' என்று கூறியதோடு தன் தவறை உணர்ந்து திருந்தி தன் மாமியார் கூறியபடியே செய்தாள். முருகன் உற்சாகத்துடன் வேலை செய்தான். அந்தக் குடும்பமும் சுகமாக வாழ்ந்து வந்தது.







அம்புலிமாமா வழங்கும்

# ஸ்ரீ ஜகன்நாதரின் பழம்பெருமை

மனோஜ் தாஸ்



# பழம்பெருமை வாய்ந்த ஸ்ரீ ஜகன்நாத ரத யாத்திரை

ஒரிஸ்ஸா மாநிலத்திலுள்ள புரி ஸ்ரீக்ஷேத்திரம் எனக் கருதப்படுகிறது. இங்குள்ள ஜெகன்நாதர் ஆலயம் மிகப் புகழ் பெற்றது. ஆலயத்திலுள்ள விக்கிரகத்துள் ஸ்ரீ கிருஷ்ணரின் புனித அஸ்தி வைக்கப்பட்டுள்ளதாகக் கருதப்படுகிறது. ஜகன்நாதர் கிருஷ்ணபகவானே. கிருஷ்ணருடன் அவருடைய தமையனார் பலராமரையும், தங்கை சுபத்திரையையும் சேர்த்து வழிபடுகிறார்கள்.

கிருஷ்ணர் கம்சனைக் கொல்ல கோகுலத்திலிருந்து மதுராபுரிக்குப் புறப்பட்டதை நினைவுகொண்டு கொண்டாடும் வகையில் ஜெகன்நாத ரத யாத்திரை கொண்டாடப்படுகிறது. இந்த வழக்கம் கலிங்க மன்னன் இந்திரத்யும்னனின் மனைவி கண்டிசாதேவியால் ஊக்கமளிக்கப்பட்டு நடைமுறையில் இருந்து வருகிறது. இத்தம்பதிகளே இந்த ஆலயத்தைக் கட்டியவர்கள். ஜெகன்நாதர், பலராமர், சுபத்திரை ஆகிய மூவரின் விக்கிரகங்களை ரதங்களில் வைத்து ஆயிரக்கணக்கான மக்கள் அந்த ரதங்களை பராதண்டா என்ற பாதையில் இழுத்துச் சென்று தற்காலிகமாக ஓரிடத்திற்குக் கொண்டு செல்கிறார்கள். இந்த விழாவைக் காண நம்நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் அயல்நாடுகளிலிருந்தும் லட்சக்கணக்கான மக்கள் புரிக்கு வருகிறார்கள்.

முக்கிய விழா புரியில்தான் நடக்கிறது என்றாலும் நாட்டின் பல இடங்ளிலும் இவ்விழா கொண்டாடப்படுகிறது. தற்போது மேலைநாடுகளில் கிருஷ்ணபக்தி இயக்கம் வலுவடைந்து வருவதால் அந்நாடுகளின் பல நகரங்களிலும் இந்த விழா உற்சாகத்துடன் கொண்டாடப்படுகிறது.

ஜெகன்நாதரை பற்றிய புராணக் கதை தொன்றுதொட்டு இவ்வாறு கூறப்பட்டு வருகிறது.

அவந்தி நாட்டை இந்திரத்யும்னன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது நேர்மையான ஆட்சியில் மக்கள் எவ்விதக் குறையையும் உணராமல் சுகமாக வாழ்ந்து வந்தார்கள்.

இப்படி எல்லாம் இருந்தும் மன்னன் தன் மனம் ஏதோ சொல்ல முடியாத குறையை உணர்வதாகக் கண்டான். அதுதான் பக்தர்கள் ஒன்று கூடி பகவானை வழிபட ஒரு பெரிய ஆலயத்தை நிர்மாணிப்பது. இந்த யோசனை அவனுக்குத் தோன்றியதும் அவன் மனதிலிருந்து பாதி பாரம் இறங்கியது போலாயிற்று. அப்போது கோவிலைக் கட்டியபின் அதில் எந்த பகவானின் விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்வது என்ற கவலை அவனுக்கு ஏற்பட்டது.

ஒருநாள் இரவு அவன் அதுபற்றி யோசித்தவாறே நன்கு தூங்கிவிட்டான். அப்போது அவன் கனவில் "முதலில் கோவில் கட்டி முடிக்கப்படட்டும். அப்போது அதில் பிரதிஷ்டை செய்ய விக்கிரகம் தானே வந்துவிடும்," என்று யாரோ கூறியது போல் அவன் காதில் விழுந்தது.



மறுநாள் மகிழ்ச்சியுடன் எழுந்தான். மந்திரிகளை எல்லாம் அழைத்து ஒரு பெரிய கோவிலைக் கட்ட இடத்தைத் தேர்ந்தெடுக்குமாறு கட்டளை இட்டான். அதற்கு அடிக்கல் நாட்ட முகூர்த்த வேளையும் குறிக்கப்பட்டது.

கடற்கரை ஓரமாக ஒரு விசாலமான இடம் தேர்ந்து எடுக்கப்பட்டது. அக்கோவிலைக் கட்ட பெரியபெரிய கற்கள் வெகுதொலைவிலுள்ள மலைப் பகுதிகளிலிருந்து யானைகள் மீது ஏற்றிக் கொண்டு வரப்பட்டன. மற்றும் ஆறுகளில் படகுகள் வாயிலாகக் கடற்கரைக்குக் கொண்டுவரப்பட்டும்



கப்பல்களில் ஏற்றப்பட்டும் ஆலயம் அமைக்கப்படும் இடத்திற்குக் கொண்டு வரப்பட்டன.

நாட்டின் பல பகுதிகளில் இருந்து ஸ்தபதிகளும் சிற்பிகளும் அந்த இடத்திற்கு வந்து ஆலய நிர்மாணப் பணிகளில் ஈடுபட்டார்கள். பக்தி சிரத்தையுடன் அப்பணி நடந்ததால் விரைவிலேயே ஆலயம் கட்டி முடிக்கப்பட்டு ஆலயம் கம்பீரத் தோற்றத்தோடு இருந்தது.

ஆலயத்தில் பகவானின் விக்கிரகம் எங்கே என்ற கேள்விதான் எல்லோரிடமிருந்தும் எழுந்தது. மன்னனும் அதுபற்றி யோசித்துக் கவலைப்படலானான். ஒருநாள் அவன் கர்ப்பக்கிருகத்தின் முன் அமர்ந்து, "தேவா! இந்தக் கோவிலில் நீ எந்த வடிவில் எழுந்தருளப் போகிறாய்? இன்னும் எவ்வளவு நாட்களுக்கு இது இப்படியே இருக்கும்? ஒரு பெரிய கோவிலைக் கட்டிவிட்டு அதில் விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்யாத என்னை உலகம் கேலி செய்யாதா? என்மீது கருணை காட்டு!" என்று உள்ளம் உருக வேண்டினான்.

அன்றிரவு அவன் கனவில் "மன்னா! புரியிலிருந்து சற்று தூரத்தில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் விக்கிரக ரூபத்தில் பூமிக்குள் இருக்கிறார். நீ தேடிப்பார். உனக்கு கிடைக்கும்," என்று ஒரு குரல் கூறியது.

இந்தப் புனித காரியத்தில் ஈடுபடுத்த நான்கு தர்மாத்மாக்களை மன்னன் தேர்ந்தெடுத்தான். அவர்களை நான்கு திசைகளில் அனுப்பி அந்த விக்கிரகத்தைக் கண்டுபிடித்து அங்கு கொண்டுவந்து சேர்க்குமாறு கூறினான்.

அந்த நான்கு தர்மாத்மாக்களில் மிகவும் இளைஞனான வித்தியாபதி கிழக்கு திசையில் கொஞ்ச தூரம் சென்றான். அடர்ந்த காட்டைப் பார்த்து பகவானை மனதில் தியானித்தவாறே போனான். அங்கு ஒரு சிறிய குன்றை அவன் கண்டான். அங்கிருந்து இன்னிசை வந்து கொண்டிருந்தது. அந்த ஒலி வந்த இடத்தை நோக்கி வித்தியாபதி சென்றான்.

அங்கு சில மலைவாசிப் பெண்கள் நடனமாடிக் கொண்டிருந்தார்கள். அந்தக் காட்சியை ரசித்தவாறே வித்தியாபதி அருகிலிருந்த ஒரு மரக்கிளையைப் பிடித்தவாறு நின்றான்.

திடீரென ஒரு புலி உறுமும் சத்தம் கேட்டு வித்தியாபதி திரும்பிப் பார்த்தான். அது அவனை நோக்கி வந்து கொண்டிருந்தது. வித்தியாபதிக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. அவன் தலை சுற்றித் தன் நினைவை இழந்து கீழே விழுந்தான்.

அப்போது ஒரு பெண்மணியின் குரல் "ராஜா, இங்கே வா!" எனக் கேட்டது. அப்போது புலியும் மெதுவாகத் திரும்பி அப்பெண்மணியை நோக்கி வந்தது. அப்பெண்மணியும் மிகவும் பரிவுடன் அதன் முதுகைத் தடவவே, அது பழகிய நாய்க்குட்டி போல் அவளது காலடியில் படுத்துக் கொண்டது. அங்கிருந்த பெண்களில் அவள் உயர்ந்தும் மிக அழகாகவும் இருந்தாள். அவள் பெயர் லலிதா. மலைவாசிகளின் தலைவன் விசுவவசுவின் ஒரே புதல்வி அவள்.

லலிதா கூறியதன் பேரில் இரு பெண்கள் ஓடிப்போய் கீழே விழுந்து கிடந்த வித்தியாபதிக்கு உணர்வு வர வாழை இலைகளால் அவன் முகத்தில் காற்றுப்பட வீசினார்கள். மற்றொருத்தி அருகிலிருந்த குளத்திலிருந்து தாமரை இலையில் தண்ணீர் எடுத்து வந்து அவனது முகத்தில் தெளித்தாள். அப்போது அவன் மெதுவாகக் கண்திறந்து பார்த்தான்.

சற்று நேரத்திற்குப் பின் லலிதா அவனருகே போய், "நீ யாரென்பதும் எங்கிருந்து எங்கே போய்க் கொண்டிருக்கிறாய் என்பதும் எங்களுக்குத் தெரியாது. காட்டில் வழி தவறிப் போய் இங்கு வந்தாயா? நீ நினைவிழந்து விழுந்துவிட்டாய். உன்னை அப்படியே விட்டுவிட்டுப் போக மனம் வரவில்லை. எங்களோடு நீயும் எங்கள் இருப்பிடத்திற்கு வருகிறாயா?" என்று கேட்டாள்.



அதுகேட்டு வித்தியாபதி பதில் எதுவும் கூறாமல் மகிழ்ச்சியுடன் எழுந்து அவர்களோடு செல்லத் தயாராக நின்றான். லலிதா முன்னதாகச் செல்ல வித்தியாபதியும் மற்ற பெண்களும் பின்னால் நடந்து சென்றார்கள்.

சற்று நேரத்திற்கெல்லாம் கட்டுமஸ்தான உடல் கொண்ட மலைவாசிகளின் தலைவன் விசுவவசு வித்தியாபதியை வணங்கி அன்புடன் வரவேற்றான். வித்தியாபதியும் அவனை வணங்கி "என்னை இந்திரத்யும்ன மன்னர் அனுப்பி உள்ளார். பகவத் கைங்கர்யத்தில் நான் என் பணியைச் செய்ய வந்திருக்கிறேன்," என்றான்.

விசுவவசு தன் இருப்பிடத்திற்கு வித்தியாபதியை அழைத்துப் போய்த் தக்க மரியாதைகளைச் செய்தான். அப்போது வித்தியாபதி நிறையப் படித்த மாபெரும் வித்வான் என அறிந்து விசுவவசு மகிழ்ச்சி அடைந்தான். சில நாட்கள் தன்னுடன் தங்கி வேதாந்த ரகசியங்களைத் தனக்குப் புரிய வைக்குமாறு அவன்

வித்தியாபதியை வேண்டிக் கொண்டான். வித்தியாபதியும் அவற்றைக் கூறினான். அவன் கூறுவதை விசுவவசுவும் லலிதாவும் சிரத்தையுடன் கேட்டார்கள்.

இச்சமயங்களில் லலிதா தன் மீது விசேஷ கவனம் செலுத்துவதை வித்தியாபதி கண்டான். ஆனால் அவன் தான் பொறுப்பேற்றுள்ள பணியை நினைவுபடுத்திக் கொண்டு தன் மனம் உறுதியான நிலையில் இருக்க பகவானைப் பிரார்த்தித்துக் கொண்டே இருந்தான்.

திடீரென வித்தியாபதியின் உடல்நலம் குன்றியது. அச்சமயத்தில் லலிதா அவனருகே இருந்து பணிவிடை செய்தாள். அதனால் அவர்கள் ஒருவரையொருவர் நன்கு புரிந்துகொண்டு மேலும் நெருங்கிப் பழகினார்கள். இதைக் கண்ட விசுவ வசுவும் அவர்களுக்கு விவாகம் செய்து வைக்கத் தீர்மானித்தான். வித்தியாபதியும் அதற்குச் சம்மதிக்கவே, வித்தியாபதிக்கும் லலிதாவிற்கும் விவாகம் சிறப்பாக நடைபெற்றது.

நாட்கள் மகிழ்ச்சிகரமாய்க் கழியலாயின. ஆனால் வித்தியாபதியின் மனதில் தான் வந்த வேலை இன்னமும் முடியவில்லையே என்ற கவலை தோன்றிக் கொண்டே இருந்தது. அப்போது அவன் ஒரு விஷயத்தைக் கவனித்தான்.

விசுவவசு தினமும் அதிகாலையில் எழுந்து எங்கோ போய்விட்டு சூரியோதயம் ஆகும்போது வீட்டிற்குத் திரும்பி வருவதை அவன் பார்த்தான். அப்படி எங்குதான் போய் என்ன செய்துவிட்டு வருகிறான் என அவன் தன் மனைவி லலிதாவிடம் கேட்டான்.

அவளும், ''இது எங்கள் குடும்ப ரகசியம். இதனை நாங்கள் யாரிடமும் சொல்லக் கூடாது. நீங்கள் என் கணவர். உங்களிடமிருந்து நான் எந்த ரகசியத்தையும் மறைக்க முடியாது. இங்கே சற்று தூரத்தில் ஒரு குகை உள்ளது. அங்கு நாங்கள் பரம்பரை பரம்பரையாகப் பூஜித்து வரும் தெய்வம் உள்ளது. அந்த தெய்வத்தை வழிபட்டு வரவே என் தந்தை தினமும் அதிகாலையில் அங்குபோய் விட்டு வருகிறார். என் தந்தையைப் போலவே அவரது முன்னோர்களும் அந்த தெய்வத்தை வழிபட்டு வந்தார்களாம்,'' என்றாள்.

''நான் அந்த தெய்வத்தைப் பார்க்க விரும்புகிறேன்,'' என வித்தியாபதி கூறவே, லலிதாவும் ''அது பற்றிப் பிறர் அறிவதே சரியல்ல என்றிருக்கும்போது அதைப் பார்ப்பது என்பது நடக்கக் கூடியதா? எனவே இந்த ஆசையை விட்டுவிடுங்கள்,'' என வேண்டினாள்.

அப்போது வித்தியாபதி, ''நான் உன்னை மணந்து கொண்ட பிறகும் அன்னியன் தானா? உன் குடும்பத்தில் நானும் ஒருவன் என்பது இல்லையா?'' என மன வருத்தத்துடன் கேட்டான்.

லலிதாவும், ''சரி, என் தந்தையிடம் கூறி இதற்கு ஏற்பாடு செய்கிறேன்,'' என்றாள். அன்றிரவே லலிதா தன் கணவனின் கோரிக்கையைத் தன் தந்தையிடம்

## நீலமாதவர் ஆலயம்

வித்தியாபதி கண்கட்டி அழைத்துச் செல்லப்பட்டதால் அவனுக்கு தான் எங்கே போகிறோம் என்பது தெரியவில்லை. விசுவவசு அவனது கண்கட்டை அவிழ்த்ததும் 'பளிச்'சென ஒரு நீலநிற ஒளி தெரிந்தது. அதில் ஸ்ரீ கிருஷ்ணர் புல்லாங்குழலுடன் இருப்பதை வித்தியாபதி பார்த்தான். அதனால் அந்த ஆலயத்திலுள்ள கடவுளுக்கு நீலமாதவன் என்ற பெயர் ஏற்பட்டது. கிருஷ்ணரின் மற்றொரு பெயர் மாதவர். புரியின் ஜெகன்நாதர் ஆலயத்தைப் போல சிறிய வடிவில் நீலமாதவர் ஆலயம் மகாநதிக் கரையருகே உள்ள காந்திலோ கிராமத்தில் உள்ளது. இது கண்டபாராவிலிருந்து 15 கி.மீ. தொலைவில் உள்ளது. இந்த ஊர் பித்தளை, வெண்கல சாமான்களுக்குப் பெயர் பெற்றது. பௌம ஏகாதசி என்ற விழாவும் இந்த நீலமாதவர் ஆலயத்தில் விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. இந்த விழாவில் கலந்து கொள்ள ஆயிரக்கணக்கான மக்கள் இங்கு வருகிறார்கள்.

தெரிவித்தாள். விசுவவசுவோ கோபம் கொண்டு தன் மகளைப் பார்த்த போதிலும் எதுவும் பதில் சொல்லவில்லை.

தன் தந்தையின் மௌனத்தைக் கலைத்த லலிதா, "தந்தையே! நான் உங்களது ஒரே மகள். உங்களுக்கு வேறு ஆண் சந்ததியும் இல்லை. ஆனால் உங்களுக்குப் பின் அந்த தெய்வத்தை யார் பூசித்து வருவார்கள்? அந்தப் பொறுப்பு என் கணவரைத் தானே சாரும்? இந்த நிலையில் அந்த தெய்வத்தை அவருக்குக் காட்டுவதில் தவறு எதுவும் இல்லை," என்றாள்.



தனக்குப் பிறகு அத்தெய்வத்தை வழிபடப் போகிறவனுக்கு அதனைக் காட்டுவதால் தான் கட்டுப்பாட்டை மீறுவதாகாது என விசுவவசு தன் மனதைத் தேற்றிக் கொண்டான்.

ஆனால், தான் வித்தியாபதியின் கண்களைக் கட்டியே குகைக்கு அழைத்துச் செல்வதாகவும், அங்கு தான் வழிபடும் தெய்வத்தைக் காட்டுவேன் என்றும் கூறவே, அதற்கு வித்தியாபதியும் இணங்கினான்.

மறுநாள் சூரியோதயம் ஆவதற்கு ஒரு மணிநேரம் முன்பே விசுவவசு வித்தியாபதியின் கண்களைக் கட்டித் தன்னோடு அழைத்துக் கொண்டு குகைக்குச் சென்றான். வித்தியாபதி முன்னதாகவே தன் இடுப்பில் கடுகை நிறையக் கட்டி எடுத்துக் வந்ததால் விசுவவசுவுக்குத் தெரியாமல் தான் செல்லும் பாதையில் ஒரு ஓரமாக அதை இறைத்துக் கொண்டே சென்றான்.

குகைக்குள் போய் விசுவவசு வித்தியாபதியின் கண் கட்டை அவிழ்த்து விட்டான். வித்தியாபதி குகைக்குள் ஒரு பீடத்தின் மீது அழகிய கிருஷ்ண விக்கிரகம் இருப்பதைக் கண்டான். விசுவவசு அதன் மீது மலர்களைப் போடுவதையும் பார்த்தான். வித்தியாபதி பளிச்சென ஓர் ஒளி ஏற்பட்டதை கண்டான் அந்த விக்கிரகம் பளிச்சென ஒளி விட்டதைக் கண்டு "ஆஹா!" என வாய் விட்டு கூவினான்.

விசுவவசுவும் "என்னப்பா! என்ன விஷயம்?" எனக் கேட்கவே, வித்தியாபதி ஒன்றும் இல்லை எனக் கூறி மழுப்பிவிட்டான். விசுவவசு பூஜையை முடித்தபின் வித்தியாபதியின் கண்களைக் கட்டிக் குகையிலிருந்து வெளியே வந்து தன் இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்றான்.

அவர்கள் வருகைக்காகக் காத்திருந்த லலிதா தன் கணவனிடம், "குகைக்குள் என்ன பார்த்தீர்கள்?" என்று கேட்கவே, அவனும் "ஒரே இருட்டுதான். எனக்கு ஒன்றுமே தெரியவில்லை!" என்று கூறினான். தான் கிருஷ்ணரின் அழகிய திருவுருவத்தை குகையில் பார்த்ததை வித்தியாபதி தன் மனைவியிடம் கூடச் சொல்லவில்லை.

இந்திரத்யும்ன மன்னர் மக்களின் நலனுக்காக ஒரு மகத்தான பணியைச் செய்ய எண்ணி ஒரு மாபெரும் பொறுப்பைத் தன்னிடம் ஒப்படைத்துள்ளதை வித்தியாபதி நினைத்துக் கொண்டான். அவன் அந்த ஒளிவிட்ட கிருஷ்ண விக்கிரத்தைத் தான் எடுத்துப் போய் மன்னனுக்குக் கொடுக்க வேண்டும். அப்படிச் செய்வது விசுவவசுவிற்கு நம்பிக்கைத் துரோகம் செய்வதாகும். ஆனால் விசுவவசு மட்டும் தன்னை நம்பாமல் தானே கண்களைக் கட்டிக் குகைக்கு அழைத்துச் சென்றான் என்று வித்தியாபதி நினைத்தான். எனவே விசுவவசு விற்குத் தெரியாமல் அந்த விக்கிரத்தை கவர்ந்து செல்வது என்பது ஒருபோதும் தவறாகாது என அவன் மனம் எண்ணியது.

இப்படியாகப் பலவிதமாய் இரவும்பகலும் அவன் எண்ணமிடலானான். இதனால் இரவில் அவனுக்குத் தூக்கம் வரவில்லை. பகலிலோ பிரமை பிடித்தவன் போல உட்கார்ந்து ஏதோ



யோசிக்கலானான். தன் கணவனிடம் ஏற்பட்ட இந்த மாறுதலை லலிதா கவனித்தாள்.

ஒருநாள் லலிதா அவனிடம், "ஏன் இப்படி இருக்கிறீர்கள்? உங்களுக்கு இந்த வாழ்க்கை பிடிக்கவில்லையா?" என்று கேட்டாள்.

வித்தியாபதியும், "எனக்கு எங்கள் நகர வாழ்க்கையைவிட இதுதான் மிகவும் பிடித்திருக்கிறது. ஆனால் என் தாய் தந்தையரைப் பற்றிய நினைவுதான் அடிக்கடி வருகிறது. அவர்களும் என்னை பற்றியே கவலைப்பட்டுக் கொண்டிருப்பார்கள். அவர்களது கடைசி நாட்களில் என்னைப் பார்க்க விரும்புவதை நான் புறக்கணிக்க முடியுமா? ஆனால் உன்னை விட்டுப் பிரிந்து நான் எப்படி அங்கே செல்ல முடியும்? உன்னை என்னோடு அழைத்து போனால் அங்கு உள்ளவர்கள் உன்னை ஏதோ ஒரு பொம்மையைப் பார்ப்பது போல அதிசயமாய்ப் பார்ப்பார்கள். மேலும் நீயும் உன் உயிருக்கு உயிரான உன் தாய் தந்தையரை விட்டுப் பிரிந்து வந்து அங்கே இருக்க முடியாது. அதனால் நீ இஷ்டப்பட்டு என்னை போக அனுமதித்தால் நான் போய் என் பெற்றோரைப் பார்த்துவிட்டு விரைவிலேயே திரும்பி வந்துவிடுகிறேன்," என்றான்.

லலிதாவும், "அப்படியானால் போய் வாருங்கள். அங்கேயே அதிக நாட்கள் தங்கிவிடாதீர்கள். சீக்கிரமே திரும்பி வந்து விடுங்கள்," என்றாள்.

லலிதா தன் தந்தையிடம் வித்தியாபதியின் விருப்பத்தைக் கூறினாள். விசுவவசுவும் அவன் அவ்வாறே போய் வரலாமே எனக் கூறித் தன்னுடைய சம்மதத்தையும் தெரிவித்தான்.

விசுவவசு வித்தியாபதியின் பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யலானான். வித்தியாபதி லலிதாவிடமும் விசுவவசுவிடமும் விடை பெற்றுக் கொண்டு குதிரை மீது அமர்ந்து தலைநகரை நோக்கிப் புறப்பட்டான்.

வித்தியாபதி முதலில் தன் ஊருக்குப் போவது போலச் சென்றான். ஆனால் கொஞ்ச தூரம் போனதும் தன் குதிரையைத் திருப்பிக்கொண்டு விசுவவசு தன்னை அழைத்துப் போன வழிக்கு வந்தான்.

சில நாட்களுக்கு முன் வித்தியாபதி விசுவவசுவுடன் குகைக்குப் போனபோது வழி நெடுக ஓர் ஓரமாய் கடுகை இறைத்துக் கொண்டே சென்றான் அல்லவா? அவை நன்கு முளைத்து வித்தியாபதி குகைக்குச் செல்ல வழி காட்டின. அவன்



அதனைக் கொண்டு வழியை அறிந்து குகையை அடைந்தான். அவன் தன் குதிரையிலிருந்து இறங்கி அதனை ஓரிடத்தில் கட்டிவிட்டு அக்குகைக்குள் சென்றான்.

அங்கு அவன் மீண்டும் அந்த அழகிய கிருஷ்ண விக்கிரத்தைக் கண்டான். அதனை வணங்கி "கிருஷ்ணா! உன் மீது பாரத்தைப் போட்டு என் கடமையைச் செய்கிறேன். இது தவறானால் என்னை மன்னித்துவிடு. இந்த விக்கிரகத்தை எடுத்துச் செல்லப் போகிறேன்," எனக் கூறி பீடத்தின் மீது வைக்கப்பட்டிருந்த கிருஷ்ண விக்கிரகத்தை எடுத்துக் கொண்டு குகையிலிருந்து வெளியே வந்தான். அங்கு தான் கட்டிய குதிரையை அவிழ்த்து அதன் மீது அமர்ந்து அங்கிருந்து கிளம்பிச் சென்றான்.

வித்தியாபதி பல மணிநேரப் பயணத்திற்குப் பின் காட்டைத் தாண்டி சமவெளிப் பகுதியை அடைந்தான்.

மாலையாகும்போது அவன் தலைநகர் புரியை அடைந்து நேராக அரண்மனைக்குச் சென்றான். மன்னனும் ஓடோடிவந்து வித்தியாபதியைக் கண்டு வரவேற்று "நீ எப்போது வரப்போகிறாய் என்றே எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். நீ வெற்றியுடன்தானே திரும்பி வந்திருக்கிறாய்?" என்று கேட்டான்.

வித்தியாபதியும், "நீங்கள் விரும்பும் விக்கிரகத்தைக் கண்டுபிடித்துக் கொண்டு வந்துவிட்டேன் என்றே நினைக்கிறேன். ஆனால்..." என்று மேலும் கூறாமல் நிறுத்தினான்.

மன்னனும், "ஆனால் என்ன? தயங்காமல் சொல். ஒரு சாதனை புரிய இடையூறுகளைச சமாளிக்க வேண்டித்தான் வரும். உன்முன் உள்ள பிரச்சினை என்ன? அதைத் தீர்க்க நான் உதவுகிறேன்," என்றான்.

வித்தியாபதியும், ''அரசே! என் வேதனையை யாராலும் தீர்க்க முடியாது. நான் தேடிக்கண்ட விக்கிரகத்தைத் திருடிக் கொண்டு வந்திருக்கிறேன். அதுவும் என்னை வெகுவாக ஆதரித்து தன் மகளையே எனக்கு விவாகம் செய்து வைத்த ஒரு புண்ணிய மகாத்மாவை ஏமாற்றி அவருக்குத் தெரியாமல் அவரிடமிருந்த இந்த விக்கிரகத்தை எடுத்து வந்துவிட்டேன். இச்செயல் கள்ளங்கபடமற்ற அவருக்கு நான் செய்த மாபெரும் துரோகம் ஆகும். இந்த விஷயம் நாளைக் காலையில்தான் அவருக்குத் தெரிய வரும். அப்போது அவரும் அவரது மகளும் எப்படித் துடிதுடித்துப் போவார்களோ? அதை நினைக்கவே என் மனம் நடுங்குகிறது,'' என்றான்.

மன்னனும், ''நீ இப்படியெல்லாம் எண்ணி உன் மனதைக் குழப்பிக் கொள்ளாதே! நேற்று நான் ஒரு கனவு கண்டேன். கடலில் ஒரு பெரிய மரத்துண்டு அலைகளால் அடித்துக் கொண்டு வரப்படுகிறது. அது நாளைக் காலை கரையோரம் வந்து சேரும். நீ கொண்டு வந்துள்ள விக்கிரகம் விஷ்ணுவின் அம்சம் கொண்டது. கரை சேர்ந்த மரத்துண்டை கடவுளின் உருவாக்கி அதற்குள் நீ கொண்டு வந்த விக்கிரகத்தை வைத்துவிடலாம். அதை தரிசிக்க உன்னை ஆதரித்த அந்த உத்தமரையும் அழைத்து வரலாம்,'' என்று கூறி வித்தியாபதியைச் சமாதானப்படுத்தினான்.

மறுநாள் மன்னன் வித்தியாபதியையும் தன் பரிவாரங்களையும் அழைத்துக் கொண்டு சூரியோதயம் ஆகும்போது கடற்கரைக்கும் சென்றான். அப்போது அலைகளில் மிதந்து ஒரு பெரிய மரத்துண்டு வருவது தென்பட்டது. மன்னனும் மந்திரியும் மற்றும் அங்கிருந்தோர் யாவரும் 'ஆகா!' எனக் கூறி வியந்தார்கள். அந்த மரத்துண்டை இழுத்துவர உடனே பத்துப் படகுகள் கிளம்பிச் சென்றன.

படகுகள் அந்த மரத்துண்டை அடைந்துவிட்டன. படகில் இருந்தவர்கள் அதனைக் கரை நோக்கி இழுத்துச் செல்ல முயன்றார்கள். ஆனால் அந்த மரத்துண்டு அசையாமல் ஒரே இடத்தில் நின்றது.

இதைக் கண்டு மன்னன் மிகவும் கவலை கொண்டான். மந்திரிக்கும் வித்தியாபதிக்கும் என்ன செய்வதென்றே தோன்றவில்லை. மன்னன் கண்களை மூடிக் கொண்டு சற்று யோசித்தான். பிறகு கடலில் உள்ளவர்களை நோக்கி ''நிறுத்துங்கள். இழுக்க வேண்டாம்,'' எனக் கூறினான்.

பிறகு வித்தியாபதியைப் பார்த்து, ''அது ஏன் நகரவில்லை என்பதன் காரணம் இப்போது எனக்குத் தெரிந்து விட்டது. நீ எடுத்து வந்த விக்கிரகத்தை இதுவரை பூசித்து வந்த அந்த உத்தமரிடம் என்னை அழைத்துச் செல்!'' என்றான்.



வித்தியாபதியும் மன்னனுக்கு வழிகாட்டவே மன்னனும் தன் பரிவாரங்களுடன் சென்றான். காட்டில் உச்சிவேளைக்கு யாவரும் விசுவவசு இருக்கும் பகுதியை அடைந்தார்கள். அங்கு ஒரே அமைதி நிலவியது. விசுவவசு தன் மகளிடம், "உன் கணவன் செய்த வேலையைப் பார்த்தாயா?" எனக் கூறியவாறே படுத்துப் புரண்டு கதறிக் கொண்டிருந்தான். லலிதாவும் என்ன நடந்திருக்கிறது என்பதை ஊகித்து விட்டாள்.

அவள் தன் தந்தையை மெதுவாக எழுப்பி வீட்டினுள் அழைத்துச் சென்றாள். அங்கும் விசுவவசு படுத்தே கிடந்தான். லலிதா அவனருகே இருந்தாள். மறுநாள் விடிவதற்குமுன் வழக்கம் போல விசுவவசு எழுந்து தான் பூசித்து வந்த குகையை நோக்கிச் சென்றான். அவனோடு லலிதாவும் அவனது மற்ற உறவினர்களும் சென்றார்கள்.

குகையில் விசுவவசு ஆராதித்து வந்த விக்கிரகம் இல்லை. அதனால் அவன் அந்த இடத்திலேயே படுத்துவிட்டான். யார் என்ன சொல்லியும் அங்கிருந்து அவன் எழுந்து வரவில்லை. லலிதாவோ தன் கணவன் அந்த விக்கிரகத்தைக் கவர்ந்து சென்றுவிட்டதால் தன் தந்தை படும் வேதனையைக் கண்டு கண்ணீர் உகுக்கலானாள்.

உச்சிவேளைக்கு ஒரு மலைவாசி அங்கு ஓடோடி வந்தான். அவன் அங்கிருந்தவர்களிடம், "நம் இருப்பிடம் நோக்கி இந்நாட்டு மன்னர் தம் பரிவாரங்களோடு வந்து கொண்டிருக்கிறார்," என்று தெரிவித்தான்.

அதைக் கேட்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். சற்று நேரத்திற்குப் பின் இன்னொருவன் வந்து "மன்னரோடு வித்தியாபதியும் இருக்கிறான்," என்றான். அப்போது சிலையைத் திருடிக்கொண்டு போனது போதாது என நினைத்து அவன் நம்மீது படை எடுத்து வர மன்னனைத் தூண்டி விட்டிருக்கிறானா?" என்று ஆத்திரத்தோடு கேட்டான்.

அப்போது அங்கு வந்து தகவல் கூறியவன், "மன்னனும் அவனோடு வருபவர்களும் தங்களுடன் எவ்வித ஆயுதமும் எடுத்து வரவில்லை," என்றான். இதற்குள் மன்னன் அந்த குகையின் வாயிலில் வந்து நின்றான்.

விசுவவசு சட்டென எழுந்து குகைக்கு வெளியே வரவே மன்னன் அவனைக் கட்டிப் பிடித்துத் தழுவிக்



கொண்டு "மகாத்மாவே! உங்கள் விக்கிரகத்தைத் திருடிய உண்மையான கள்வன் நானே. இந்த வித்தியாபதி அல்ல. என்னை மன்னிப்பீர்களா?" என்று கேட்டான்.

விசுவவசுவும் தன் கண்களில் பெருகிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மன்னனை மரியாதையுடன் அழைத்துப்போய் ஒரு பாறை மீது அமரச் செய்தான். அப்போது மன்னன் விசுவவசுவிடம், "நான் கூறுவதைச் சற்று கவனமாகப் பொறுமையுடன் கேளுங்கள்," எனக்கூறி தான் ஆலயம் கட்டுவதிலிருந்து ஆரம்பித்து அதில் பிரதிஷ்டை செய்ய விக்கிரகம் எங்கு கிடைக்கும் எனத் தனக்குக் கனவில் கூறப்பட்டதைச் சொன்னான்.

பிறகு அவன், "விசுவவசு! வம்ச பரம்பரையாக இதுவரை நீங்கள் இந்த விக்கிரகத்தைப் பூசித்து வந்திருக்கிறீர்கள். கடவுளின் கட்டளைப்படி அந்த விக்கிரகத்தை அவர் அனுப்பியுள்ள மரத்துண்டை எடுத்து விக்கிரக வடிவம் கொடுத்து அதில் உங்கள் விக்கிரகத்தை வைத்து ஆலயத்தில் பிரதிஷ்டை செய்ய வேண்டும். இதற்கு உங்கள் அனுமதி தேவை!" என்றான்.

விசுவவசுவும் மௌனமாகச் சற்றுநேரம் இருந்துவிட்டு பிறகு மெதுவாக தலையை அசைத்தான். அப்போது மன்னன், "என் கனவில் கூறியபடி கடலில் பெரிய மரத்துண்டு ஒன்று அலைகளுக்கு இடையே மிதந்து நிற்கிறது. அதை யாராலும் நகர்த்த முடியவில்லை. தாங்கள் அந்த மரத்துண்டைத் தொட்டால்தான் அது நகர்ந்து கரைக்கு வந்து சேரும்," என்றான்.

விசுவவசுவும் சற்று யோசித்துவிட்டு "சரி, தங்கள் விருப்பப்படியே நடக்கிறேன்," என்றான். மன்னனின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அவன் மீண்டும் ஒருமுறை விசுவவசுவைக் கட்டித் தழுவிக் கொண்டு பக்கத்தில் நின்ற லலிதாவைப் பார்த்து "மகளே! உன் கணவனைத் தவறாக எண்ணாதே. ஒரு மகத்தான செயலைப் புரியவே உன்னிடமிருந்து உண்மையை மறைத்தான்," என்றான்.



லலிதாவும் கண்ணீரோடு அவனைப் பார்த்தபடியே நின்றாள். அதன்பின் மன்னன் விசுவவசுவை அழைத்துக் கொண்டு தன் பரிவாரங்களோடு கிளம்பினான். மறுநாள் காலை யாவரும் புரியின் கடற்கரையை அடைந்தார்கள். விசுவவசு ஒரு படகில் அமர்ந்து அந்த மரத்துண்டு இருக்கும் இடத்தை அடைந்தான்.

அவன் அதைத் தொட்டதும் அது

நகர்ந்து கடற்கரையோரம் வந்து சேர்ந்தது. மன்னன் தன் ஆட்களிடம் அதனை அரண்மனைக்குத் தூக்கிக் கொண்டு போகுமாறு கட்டளை இட்டான். அவர்கள் மன்னனது கட்டளையை நிறைவேற்றினார்கள். காலையில் அவன் ஆஸ்தான சிற்பிகளையும் பல ஊர்களிலிருந்து வந்து சிற்பக் கலைஞர்களையும் ஒன்று கூட்டி "இந்த மரத்தைக் கொண்டு எந்த பகவானின் விக்கிரகத்தைச் செய்வது மேலானது?" என்று கேட்டான்.

அப்போது ஒரு கிழவன் அங்கு வந்து "அரசே! இந்த மரத்துண்டைக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணர், அவரது அண்ணன் பலராமன், அவர்களது சகோதரி சுபத்திரை ஆகியோரின் உருவங்களைச் செதுக்குமாறு எனக்குக் கடவுளின் கட்டளை கிடைத்துள்ளது. இந்த விக்கிரகங்களால் இவ்வாலயம் தனிச் சிறப்பு பெறும். நான் இந்த மரத்துண்டிலிருந்து விக்கிரகங்களை செய்து கொடுக்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனையை ஏற்றாலே என்னால் அவ்வாறு செய்ய முடியும்," என்றான்.

அதைக் கேட்ட மன்னனும், "அது என்ன?" என்று கேட்கவே, அக்கிழவனும் "நான் ஒருவனே தனிமையில் ஓரிடத்தில் செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும். அந்த இடத்தின் கதவுகளை நான் மூடிக்கொள்வேன். விக்கிரகங்கள் தயாரானதும் நானே கதவுகளைத் திறந்துகொண்டு வருவேன். இதற்கிடையே யாரும் கதவைத் தட்டி கூப்பிடக் கூடாது," என்றான்.

மன்னனும் அரண்மனைக் குள்ளேயே ஒரு பெரிய அறையைத் தேர்ந்தெடுத்து அதில் விக்கிரகங்களை செய்யலாம் எனக் கூறினான். கிழவனும் கதவுகளை மூடிக் கொண்டு தன் வேலையை ஆரம்பித்தான். வெளியில் இருப்போர் கதவின் மீது காதுகளை வைத்துக் கேட்டால் சுத்தியலால் அடிக்கும் சத்தம் கேட்கும். ராணி ஆவலோடு தினமும் அந்த அறையின் பெரிய கதவருகே நின்று காது கொடுத்துக் கேட்டு வந்தாள். உள்ளே சுத்தியலால் அடிக்கும் சத்தம் கேட்டு அவள் திருப்திப்பட்டு வந்தாள்.

இப்படியே சில நாட்கள் கழிந்தன. ஒருநாள் எவ்வித சத்தமும் இல்லாதது கண்டு ராணி திடுக்கிட்டாள். கிழவனுக்கு என்ன ஆயிற்றோ எனப் பயந்து அவள் அறையின் கதவைத் திறந்து பார்த்தாள். விக்கிரகங்களை அப்போதே செய்து முடித்த கிழவன் கதவைத் திறந்துகொண்டு ராணி வருவதைக் கண்டான். உடனே அவன் மாயமாய் மறைந்துவிட்டான். கிழவனாக வந்தது தேவ லோக சிற்பி விசுவகர்மா என யாவருக்கும் தெரிந்தது. கிருஷ்ணரை அறியாமல் கொன்ற ஜரசவரனின் வம்சத்தில் வந்தவன் தான்





விசுவவசு. அவன் வழிபட்டு வந்தது கிருஷ்ணரது புனித அஸ்தியாக இருந்திருக்க வேண்டும். அவன் வழிபட்ட கிருஷ்ண விக்கிரகத்தில் அது எப்போதோ வைக்கப்பட்டது. உலக நாயகன் எனப் பொருள் படும் ஜகன்நாதர் விக்கிரகத்துள் அதுவே வைக்கப்பட்டது. புரியில் கோவில் கொண்டுள்ள இவரை தரிசிக்க பக்தர்கள் புனித யாத்திரையை மேற்கொள்கிறார்கள். வித்தியாபதி, லலிதா தம்பதிக்குப் பிறந்து வம்சாவழியாக வந்தவர்கள் தெய்வத் தம்பதிகள் எனப்படுகிறார்கள். அவர்கள் தாம் புரி ஆலயப் பிரதான அர்ச்சகர்களாக உரிமை பெற்றவர்கள்.

**ஜகன்நாதரைப் பற்றிப் பல கதைகள் கூறப்படுகின்றன. அவற்றில் ஒன்று புரிமன்னரைப் பற்றியும் அவர் நடத்திய ரத யாத்திரை விழாபற்றியதும் ஆகும்.**

வெகுகாலத்திற்கு முன் கலிங்க இளவரசன் புருஷோத்தமதேவன் நாட்டைச் சுற்றிப் பார்க்க கிளம்பினான். பல கிராமங்களையும் நகரங்களையும் கடந்து பழம்பெரும் நகரான புகழ் பெற்ற காஞ்சிபுரத்தை அடைந்தான். காஞ்சி மன்னன் அவனைத் தன் விருந்தினனாக அழைத்து உபசரித்தான். அம்மன்னனின் மகள் பத்மாவதி. அவளது குணமும் அழகும் புருஷோத்தமனைக் கவர்ந்தன. அவன் அவளை மணக்க எண்ணிக் கொண்டிருக்கையில் அவனது தந்தை நோய்வாய்ப்பட்டிருப்பதாகச் செய்தி வந்தது. உடனே புருஷோத்தமன் புரிக்குச் சென்றான். அங்கு அவனது தந்தையின் மரணத்திற்குப்பின் அவன் அந்நாட்டின் மன்னனாகிவிட்டான்.

அவன் காஞ்சி மன்னனுக்குத்தான் பத்மாவதியை மணக்க விரும்புவதாகச் செய்தி அனுப்பினான். காஞ்சி மன்னனும் மகிழ்ந்து தன் சம்மதத்தைத் தெரிவிக்கத் தன் அமைச்சரை அனுப்பினான். அப்போது புரியில் ரத யாத்திரை விழா நடந்து கொண்டிருந்தது. அந்த ரத யாத்திரை விழாவின்போது ரதங்கள் செல்லும் ஒரு வழியை கலிங்க மன்னனே துடைப்பம் கொண்டு பெருக்கி சுத்தம் செய்வது என்பது பல ஆண்டுகளாகத் தலைமுறை தலைமுறையாக அனுஷ்டிக்கப்படும் ஒரு சம்பிரதாயம். மன்னன் கூட பகவானுக்கு அடிமையே என்பதைக் காட்டவே இப்படிச் செய்யப்பட்டு வந்தது. புருஷோத்தமனும் அதையே செய்து கொண்டிருந்தான்.

காஞ்சியிலிருந்து வந்த அமைச்சருக்கு கலிங்க மன்னன் இவ்வாறு செய்தது பிடிக்கவில்லை. அவர் காஞ்சிக்குத் திரும்பிப்போய் தன் மன்னனிடம், "தெருப் பெருக்கும் ஒருவனுக்கா நம் இளவரசியைத் திருமணம் செய்து வைப்பது? கூடவே கூடாது," என்றான். காஞ்சி மன்னனும் தன் அமைச்சர் கூறியதை ஏற்று அத்திருமணத்திற்குச் சம்மதிக்கவில்லை.

இதைக் கேட்ட கலிங்க மன்னன் புருஷேத்தமன் கோபம் கொண்டான். அவன் காஞ்சி மீது படை எடுத்துச் சென்றான். ஆனால் படுதோல்வி அடைந்து புரிக்குத் திரும்பினான். அவன் அங்கு ஆலய விக்கிரகங்களின் முன் விழுந்து கிடந்து பல நாட்கள் பிரார்த்தனை செய்தான். அப்போது ஒரு குரல் அவன் மறுபடியும் காஞ்சி மீது படை எடுக்க வேண்டும் என்று கூறியது.

புருஷோத்தமதேவன் தன் படைகளை சீர்ப்படுத்திக் கொண்டு காஞ்சியை நோக்கிச் சென்றான். வழியில் சிலிக்கா ஏரிக்கரையில் ஒரு கிழவி அவனை நிறுத்தி, "சற்று முன் இருவர் என்னிடமிருந்து நீர்மோர் வாங்கிக் குடித்தார்கள். அவர்களில் ஒருவர் அழகாயும் மற்றவர் கருப்பாகவும் இருந்தார்கள். அவர்களிடம் குடித்த மோருக்குக் காசு கேட்டபோது அவர்கள் இந்த மோதிரத்தைக் கொடுத்து "அதோ வந்து கொண்டிருக்கும் இளைஞரிடம் இதை நீ காட்டினால் அவர் காசு கொடுப்பார் என்றார்கள். நீ காசு கொடுக்கிறாயா?" என்று கேட்டாள்.



புருஷோத்தமதேவனும் அந்த மோதிரத்தை வாங்கிப் பார்த்தான். அது பகவான் ஜகன்நாதரின் மோதிரம் எனக் கண்டு கொண்டான். கிழவியிடம் மோர் வாங்கிக் குடித்தவர்கள் கிருஷ்ண பகவானும், அவரது தமையனார் பல ராமரும்தான் என்பதை அவன் அறிந்து கொண்டான். அவர்கள் குடித்த நீர் மோரின் விலையாக மாணிகா என்ற அக்கிழவிக்கு ஒரு கிராமத்தை மானிய மாக அளித்தான். அது இன்றும் மாணிக்க பட்டணம் என்ற பெயரில் உள்ளது. இதன்பின் காஞ்சிக்குப் போய் போரிட்டு புருஷோத்தமதேவன் வெற்றி பெற்றான்.

காஞ்சி மன்னனைச் சிறைப்பிடித்து கண்ணியமாக நடத்தி விடுதலை செய் தான். ஆனால் பத்மாவதியைச் சிறைப் பிடித்த அவன் அவளைக் கண்ணியமாக நடத்தவில்லை. எல்லோரும் அவன் பத்மாவதியை மணப்பான் என்றே எதிர் பார்த்தார்கள். ஆனால் அவன் தன் கிழ அமைச்சரிடம், "அமைச்சரே! ஒரு தெருப்பெருக்கியைத் தேடிப் பிடித்து இவளுக்கு மணம் செய்து வையுங்கள்!" என்று கட்டளை இட்டான்.

பத்மாவதியும் ஒரு தெருப்பெருக்கி யுடன் என்று தன் திருமணம் நடக்கப் போகிறது எனக் காத்திருந்தாள். அவளது வருத்தத்திற்கு எல்லையே இல்லை. சில நாட்களுக்குப் பின் ரத யாத்திரை விழா வந்தது. அப்போது மன்னன்



புருஷோத்தம தேவன் ரதங்கள் செல்லும் ஒரு தெருவைப் பெருக்க ஒரு தங்கத் துடைப்பத்தோடு வந்தான். அப்போது பாசத்துடன் ஒரு கை அவனது தோளைப் பற்ற, மன்னன் நிமிர்ந்து பார்த்தான். அவனது அமைச்சரே அவ்வாறு செய்தவர். அவர் சைகைசெய்ய இளம் பெண் ஒருத்தி வந்து மன்னனின் கழுத்தில் மாலை இட்டாள். அவள் பத்மாவதியே!

கிழ அமைச்சரும், "இவளுக்கு ஏற்ற தெருப்பெருக்கியை எங்கு தேடியும் கிடைக்க வில்லை. இன்று இங்கே இப்போதுதான் கிடைத்தார்," என்று கூறிச் சிரித்தார். மன்னனும் வெட்கித் தலை குனிந்தான். கிழ அமைச்சர் கூறியபடி அவனும் மலர் மாலையை எடுத்து பத்மாவதியின் கழுத்தில் போட்டான். பத்மாவதியும் கலிங்கத்து ராணியாகிவிட்டாள்!

## ஒரிஸ்ஸா சுற்றுலா நிகழ்ச்சி நிரல் (ஜூலை-டிசம்பர் 2003)

| பண்டிகை/திருவிழாவின் பெயர் | தேதியும் மாதமும் | விழா நடத்தப்படும் இடங்கள் |
|---|---|---|
| ஸ்நான யாத்திரை | 14 ஜூன் | புரி |
| ரத யாத்திரை | 1 ஜூலை | புரி, கேந்திரபாரா, பரிபாதா |
| பஹூதா யாத்திரை | 9 ஜூலை | புரி, கேந்திரபாரா, பரிபாதா |
| துர்க்கா பூஜை | 2–5 அக்டோபர் | கட்டக் |
| கஜலக்ஷ்மி பூஜை (குமார் பூர்ணிமா) | 9 ஆக்டோபர் | தேன்கனால் டவுன் |
| அநல் நவமி | 2 நவம்பர் | சகிகோபால் |
| படா ஒஷா | 7 நவம்பர் | தவளேஸ்வர் |
| பலி யாத்திரை | 8 நவம்பர் | கட்டக், பாராதீப், கோனார்க், பாலுகாம் |
| பரப் (மலைவாசிகள் விழா) | 6–18 நவம்பர் | கோராபட் |
| கடற்கரை விழா | 23–27 நவம்பர் | புரி |
| கோனார்க் நாட்டிய விழா | 1–5 டிசம்பர் | கோனார்க் |

*செல்லும் வழி:* ஜகன்நாதர் ஆலயத்திற்கும் ரதயாத்திரைக்கும் புரிபெயர்பெற்றது. இது புவனேஸ்வரிலிருந்து 60 கி.மீ. தொலைவிலும் கோனார்க்கிலிருந்து 35 கி.மீ. தொலை விலும் உள்ளது. கல்கத்தா, டில்லி, அகமதாபாத் திருப்பதி ஆகிய இடங்களிலிருந்து நேர் ரயில் தொடர்பு உள்ளது. மேலும் விவரங்களுக்கும் இட வசதிக்கும் ஒரிஸ்ஸா சுற்றுலாக் கழகம் (ஓ.டி.டி.சி) பந்த நிவாஸ், அல்லது புரி சுற்றுலா அலுவலகத்துடன் தொடர்பு கொள்ளவும்.

# Touch Orissa to feel India

Culture



Flowing through the arteries of Orissa, is the living and continuing culture of India... its varied expressions and its rich variety. The very stones speak of the unique history of the nation. The temple-culture condenses the quintessence of India. Whether it is the sacred environs of Lord Jagannath temple, or the eroticism of Konark's Sun temple, the wondrous caves of Jainism or the mystical monasteries of Buddhism, the paintings of folklore or the weaver's magic... Orissa speaks eloquently of a living past and continuing present.The rhythmic and exotic classical 'Odissi dance' evolved from the cult of the 'devadasis' or female temple dancers reverberates not only within the portals of the nation, but also echoes on foreign shores too. Folk dances like the 'Chhow' or the 'Sambalpuri' dance and tribal dances like the 'Ghumura' & 'Paraja' can set any soul ablaze. Indigenous theatre in the form of 'Prahalad-Nataka' or the 'Dhanuyatra' are expressions of the 'Indianness of India'. Fairs like the 'Bali Jatra' remind us of our ancient maritime links with Bali. And to crown it all is our universally-acclaimed 'Rathyatra' of Lord Jagannath which has infected the world. So... sure and true flows the Orissan culture reflecting the Indian Culture.

Orissa
The Soul of India




Visit Orissa - Experience India.

**For more information contact**: Director, Tourism; Paryatan Bhavan; Bhubaneswar-751014, Orissa, India Tel: (0674) 2432177, Fax: (0674) 2430887, e.mail:ortour@sancharnet.in, website:www.orissa-tourism.com Tourist Offices at; **Chennai:** Tamilnadu Tourism Complex, Ground Floor, Near Kalaivanar Arangam Wallajah Road, Chennai - 600002, Ph: (044) 25360891, **Kolkata**: Utkal Bhawan 55, Lenin Sarani, Pin-700013 Tel: (033) 22443653, **New Delhi:** Utkalika, B/4 Baba Kharak Singh Marg, Pin - 110001, Telefax (011) 23364580



## நாய்களுக்கு சுகபோகம்!

டோக்கியோவில் நாய் வளர்ப்பவர்கள் தம் நாய்கள் பருத்து உடல் எடை கூடிவிடக் கூடாது என கவனமாக இருக்கிறார்கள். இதற்காக உதார குணமிக்க சிலர் இவற்றிற்கான உடல்நலப் பாதுகாப்பு மையங்களை அமைத்துள்ளனர். அவை ஓடி ஆடி நீர்க்குமிழிகள் எழும் ஜாகுசீஸ் எனப்படும் நீர்த்தொட்டிகளில் முங்கி எழுகின்றன. பிறகு நல்ல நீரில் நன்கு குளித்து வரவே, அவற்றின் உடலில் தேயிலைகளிலிருந்து இறக்கப்பட்ட எண்ணெய் தடவப்படுகிறது. நாய்களுக்குத் தான் என்ன சொகுசு, பார்த்தீர்களா!

## 12 மணி நேரத்தில் ஒரு புத்தகம் தயார்!




உலகப் புத்தக நாள் ஏப்ரல் 23ல் கொண்டாடப்பட்டது. அன்று ஜெர்மனியின் புத்தக வெளியீட்டு நிலையம் ஒன்று வரலாறு காணாத நிகழ்ச்சி ஒன்றை நடத்திக் காட்டியது. அன்று காலை 7.45க்கு நாற்பது எழுத்தாளர்களுக்கு ஒரு தலைப்பு கொடுக்கப்பட்டது. இதற்கு 12 மணி நேரத்திற்குப்பின் அதாவது இரவு 7.45க்கு அந்த நூலின் பிரதிகள் 10 நகரங்களில் விற்பனைக்கு வந்துவிட்டன. இந்த 12 மணி நேரத்தில் இந்த நூல் எழுதப்பட்டு, அச்சு கோர்க்கப்பட்டு, அச்சடிக்கப்பட்டு 'பைண்ட்' செய்யப்பட்டது. இந்த கால அவகாசத்துள் முகவுரை எழுதி வாங்கப்பட்டு இந்த 100 பக்க நூலை ஸ்டிஃப்டங்லெஸ்ஸன் என்ற நிறுவனம் ஆர்வத்துடன் வெளியிட்டுள்ளது.

# மேகாலய நாட்டுப்புறக் கதை

மேகாலயா என்றால் மேகங்களின் ஆலயம் என்று பொருள். மேகங்கள் அடர்ந்த இப்பகுதி இயற்கையின் அன்பளிப்பு. இமயமலைத் தொடரின் பகுதியாயுள்ள இந்தப் பிரதேசத்தில் நிறைய மழை பெய்கிறது. சூரிய ஒளி, உயர்ந்த பீடபூமிகள், நீர்வீழ்ச்சிகள், தெள்ளத் தெளிந்த நீர் பாயும் ஆறுகளும் ஓடைகளும் ஏராளமாக உள்ளன.

மேகாலயாவின் வடக்கிலும் கிழக்கிலும் அஸ்ஸாமும், பங்களாதேஷ் தெற்கிலும் மேற்கிலும் உள்ளன. அஸ்ஸாம் மாநிலத்திலிருந்து தனியாக்கப்பட்டு அமைக்கப்பட்ட இது முழு மாநில அந்தஸ்தை 1972 ஜனவரி 21ல் அடைந்தது.

இதன் தலைநகர் ஷில்லாங். இது 1972 வரை அஸ்ஸாமின் தலைநகராக இருந்தது. ஆங்கிலேயர்களின் கோடைவாசத்தலமாகவும் இது இருந்தது. ஷில்லாங் கடல் மட்டத்திற்கு மேல் 1496மீ. உயரத்தில் அமைந்துள்ளது. மலைச் சரிவுகள் நிறைந்த இப்பகுதி 'கிழக்கு ஸ்காட்லாண்டு' எனவும் அழைக்கப்படுகிறது.

மேகாலயாவின் மக்கள்தொகை 2,306,069. இதன் பரப்பளவு 22,000 சதுர கி.மீ. இங்கு வழக்கிலுள்ள மொழிகள் காசி, காரோ, ஆங்கிலம் ஆகியவை. அரசாங்க மொழியாக ஆங்கிலம் பயன்படுத்தப்படுகிறது.

## புலியை வென்ற பன்றிக் குட்டி

பன்றிகள் அழுக்கானவை எனக் கருதப்படுகிறது. ஆனால் முன் காலத்தில் அவை இப்படி இருக்க வில்லை. அவை காட்டின் மற்ற மிருகங்களைப் போல சுத்தமாக இருந்தன. பின்னர் பன்றிகள் எப்படி அழுக்கானவைகளாக ஆகின என்பதற்கான கதை இதுதான்.

மேகாலயக் காட்டுப் பகுதியில் எல்லா மிருகங்களும் நல்லிணக்கத்துடன் வாழ்ந்து வந்தன. காட்டில்



அவற்றிற்குப் போதிய உணவும் கிடைத்துக் கொண்டிருந்தது.

ஒருநாள் ஒரு புலி வேட்டையாடக் கிளம்பியது. அது பல மிருகங்களைக் கொன்று வயிறு நிறையத் தின்றது. அதன்பின் தண்ணீர் குடிக்க ஏதாவது நீர்நிலை இருக்குமா என்று பார்த்தது.

அது ஒரு குட்டையைக் கண்டு நீர் குடிக்க அதனருகே சென்றது. அப்போது ஒரு பன்றிக் குட்டி புழுதியில் புரண்டு விளையாடிவிட்டு அந்தக் குட்டைக்கு வந்து அதில் குதித்து நீரைக் குடித்துக் கொண்டிருந்தது. புலி அந்தக் குட்டைக்கு வந்து கொண்டிருப்பதைக் கண்டு அது நடுநடுங்கி எப்படித் தப்பி ஓடுவது என்று யோசித்தது.

புலியோ அதைப் பார்க்கவில்லை. அது குட்டையின் நீரைக் குடிக்கக் குனிந்தது. அப்போது நீர் கலங்கி துர்நாற்றம் அடிப்பதை அது கண்டது. பன்றிக் குட்டியின் உடலில் அப்பி இருந்த சேறும் சகதியும் தான் குட்டையின் நீரை அப்படிச்



செய்திருந்தது. அந்த துர்நாற்றத்தைச் சகிக்க முடியாமல் புலி அந்தக் குட்டையின் நீரைக் குடிக்காமல் வேறு எங்காவது நீர் இருக்கிறதா எனத் தேடிக் கொண்டு போயிற்று.

பன்றிக் குட்டிக்கு புலியின் இந்தச் செயல் ஆச்சரியத்தை அளித்தது. பிறகு அது புலி தன்னைக் கண்டு பயந்து ஓடிவிட்டது என்று எண்ணி விட்டது. அதனால் அது தனக்கு ஒரு

## இப்பகுதி மக்கள்



மேகாலயாவில் பலதரப்பட்ட மக்கள் வசிக்கிறார்கள். இவர்களில் முக்கியமாக காசிகள், காரோக்கள், ஜைந்தியர்கள் ஆகியோரைக் குறிப்பிடலாம். இவர்களது முக்கிய தொழில் நெசவு தான். இவர்கள் துணிகளை நெய்வதிலும் கூடைகள் முடைவதிலும் கைதேர்ந்தவர்கள். பாய்கள் தயாரிப்பது இவர்களது சிறப்புக் கலையாகும். வண்ணக் கூடைகள், பிரம்பு நாற்காலிகள் செய்வதில் கைதேர்ந்தவர்கள். காரோக்களும் ஜைந்தியர்களும் நேர்த்தியான துணிகளை நெய்வதில் திறமையானவர்கள்.

# நாட்டுப்புற நடனங்கள்



மேகாலயாவின் காரோக்கள் வாக்லா எனப்படும் நூறு முரசுகளோடு புரியும் நடனம் புகழ் பெற்றது. இது அறுவடைக்குப் பிறகு ஆடப்படுவது. செழுமைக்கான சத்யோங்கைத் துதித்து இந்த நடனம் அநேகமாக நவம்பர் மாதத்தில் ஆடப்படுவதாகும். இளைஞர்களும் முதியோர்களும் வண்ண ஆடைகளையும் இறகுகளாலான தலைப்பாகைகளையும் அணிந்து களிநடனம் புரிகிறார்கள்.

நாங்க்ரம் என்பது காசிக்கள் அக்டோபர் மாதத்தில் புரியும் நடனம். இதுவும் நல்ல அறுவடைக்காக நன்றி செலுத்தும் நடனமே. திறந்தவெளியில் ஆடப்படும் இந்நடனத்தில் பெண்கள் பட்டாடைகளையும் நகைகளையும் அணிந்து வட்ட வடிவில் ஆட அவர்களைச் சுற்றி அதே வடிவில் ஆண்களும் குழலுக்கும் முரசுகளுக்கும் ஏற்ப ஆடுகிறார்கள்.

யானையின் பலம் இருப்பதாக எண்ணிக் கொண்டு புலியைத் துரத்திக் கொண்டு அதன் பின்னால் ஓடி ''ஏய் பயந்தாங்கொள்ளி புலியே, ஓடாதே! வா என்னுடன் சண்டை போட,'' என்று சவால் விட்டது.



புலியோ அந்த சவாலைக் கேளாமலேயே தன் தாகத்தைத் தணித்துக் கொள்ளத் தண்ணீரைத் தேடிக் கொண்டிருந்தது. அது முடிவில் ''ஏய்! இன்று நான் உன்னுடன் சண்டை போட மாட்டேன். நாளை இதே இடத்திற்கு வா, சண்டை போட லாம்,'' என்றது.

இதைக் கேட்ட பன்றிக் குட்டி தன்னைக் கண்டு புலி பயந்தே அவ் வாறு கூறுவதாக எண்ணிவிட்டது. அதனால் பெருமை தாங்காது அது தன் இருப்பிடத்திற்கு ஓடி எல் லோரிடமும் ''புலி என்னைக் கண்டு பயந்துவிட்டது. இனிமேல் நான் தான் இந்தக் காட்டின் ராஜா,'' என்றது.

பிறகு அது குட்டையில் நடந்ததை விவரமாகக் கூறியது. அதைக் கேட்டு



எல்லாப் பன்றிகளும் திகைத்துப் போயின. அவைகளுக்கு புலி ஏன் குட்டையின் நீரைக் குடிக்காமல் போய்விட்டது என்பதன் காரணம் தெரிந்துவிட்டது. அவை பன்றிக் குட்டியை முட்டாள் என்று திட்டின.

அப்போது தான் பன்றிக் குட்டிக்குத் தான் புலிக்குச் சவால் விட்டது எவ்வளவு பெரிய தவறு எனப் புரிந்தது. புலி மறுநாள் தன்னைக் கொல்வதோடு நில்லாமல் எல்லாப் பன்றிகளையுமே கொன்றுவிடுமே என அது உணர்ந்தது.

அது எல்லாப் பன்றிகளிடமும், ''ஐயோ! நான் அவசரத்தில் அறிவு இழந்து இப்படிச் செய்துவிட்டேனே! இதனால் உங்கள் எல்லோர் அழிவிற்கும் நான் காரணமாகி விட்டேன்,'' என்று புலம்பியது.

அப்போது அந்தப் பன்றிக் குட்டியின் தாத்தாவான பன்றி ''நாளை புலியை நீ குறிப்பிட்ட இடத்திற்கே போய்ப் பார். ஆனால் அதைப் பார்க்குமுன் நீ சகதியிலும் சேற்றிலும் நன்கு புரண்டுவிட்டு அவற்றை உடல் முழுவதிலும் அப்பிக் கொண்டு போ!'' என்றது.

மறுநாள் பன்றிக் குட்டி தன் தாத்தா கூறியதுபோலத் தன் உடலில் சேற்றையும் சகதியையும் ஒட்ட வைத்துக் கொண்டு குறிப்பிட்ட இடத்தை அடைந்தது. அங்கு புலியும் பன்றிக் குட்டியைக் கொன்று தின்னலாம் என்ற ஆசையுடன் காத்துக் கொண்டிருந்தது. ஆனால் பன்றிக் குட்டி வரும்போதே சகிக்க முடியாத நாற்றம் அதன் உடலிலிருந்து வருவதைக் கண்டு புலி ''போ, போ! என் பக்கம் வராதே!'' என்று கூவியது. பன்றிக் குட்டி அப்போது ''அப்படியானால் நாம் சண்டை போடப் போவது இல்லையா?'' என்று கேட்டது.

புலியோ, ''ஐயோ! உன்னுடனா சண்டை? வேண்டவே வேண்டாம், நான் போய் விடுகிறேன்,'' என்று கூறிக் கொண்டே ஓடிவிட்டது. பன்றிக் குட்டி சந்தோஷத்தோடு தன் இருப்பிடத்திற்குத் திரும்பி வந்தது.

அன்று முதல் பன்றிகள் வெளியே போகுமுன் தம்மைக் காத்துக் கொள்வதற்காக சேற்றிலும் சகதியிலும் புரண்டுவிட்டே செல்லலாயின. அந்தப் பழக்கம் இன்றும் பன்றிகளிடையே தொடர்ந்து வருகிறது.



# கை நழுவிய அதிர்ஷ்டம்!

மணலூரில் பாலன் என்றும் வேலன் என்றும் இரு நண்பர்கள் இருந்தார்கள். பாலன் மிகவும் அடக்கத்துடன் பணிவாய் எல்லோருடனும் பேசுபவன். ஆனால் வேலனோ யாரிடமும் கேலியாகவும் குத்தலாகவும் பேசுபவன். இருவரும் ஏழைக் குடும்பத்தவர்களே. ஒரு முறை அவர்கள் இருவரும் தலைநகரில் நடக்கும் தசரா விழாவைக் காணத் தம் ஊரிலிருந்து கிளம்பினர்.

அவர்கள் பனையூரை அடைந்த போது அவர்களுக்கு மிகவும் பசி எடுத்தது. அப்போது எதிரே தென்பட்ட ஒரு சிறு குடிசையின் கதவைத் தட்டினார்கள். கதவைத் திறந்து கொண்டு மிகவும் வயதான கிழவி நின்று ''யாரப்பா நீங்கள்? என்ன வேண்டும்?'' என்று கேட்டாள்.

பாலனும், ''பாட்டி! நாங்கள் வெளியூர்க்காரர்கள். எங்களுக்குப் பசியாக இருக்கிறது. உண்ண ஏதாவது கிடைக்குமா?'' என்று கேட்டான்.

கிழவியும், ''ஐயோ பாவம்! பசியாக இருக்கிறீர்களா? உள்ளே வந்து உட்காருங்கள். ஒரு நொடியில் சமைத்துச் சாப்பாடு போடுகிறேன்,'' என்றாள். அவர்களும் உள்ளே போய் உட்கார்ந்தார்கள்.

கிழவியும் சமையல் செய்து சாப்பாடு போட்டாள். அவர்களும் திருப்தியாகச் சாப்பிட்டார்கள். அதன் பின் அவர்கள் கிழவியிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினார்கள். அப்போது பாலன் சில செப்பு நாணயங்களை அவளிடம் கொடுத்து ''நல்ல சாப்பாட்டைப் போட்டு

- என். சோபினி -

எங்கள் பசியைத் தீர்த்தீர்கள். இதற் காக எவ்வளவு கொடுத்தாலும் தகும். ஏதோ எங்கள் சக்திக்கு ஏற்ப கொடுக் கிறோம். ஏற்றுக் கொள்ளுங்கள்,'' என்று பணிவுடன் கூறினான்.

கிழவியும், ''பசியோடு வரு பவனின் பசியைப் போக்க உணவு அளிப்பது மனிதனின் கடமை. அதைத் தான் செய்தேன். சரி, எனக்கு வெகுநாட்களாக இடுப்பில் வலி உள்ளது. அதற்கு வைத்தியம் செய்து கொள்ள என்னிடம் பணம் இல்லை. இந்த வலி போக ஏதாவது வழி தெரிந்தால் சொல்லுங்கள்,'' என்று கேட்டான்.

அப்போது வேலன் வழக்கம் போல் குறும்பாக, ''பாட்டி! உன் வீட்டுக் கொல்லைப்புறத்தில் உள்ள புளியமரக் கிளையில் கயிறைக் கட்டி அதில் உட்கார்ந்து ஊஞ்சல் ஆடு. அப்போது வலி போகும். ஒரு வேளை அப்படிச் செய்தும் வலி போகாவிட்டால் அந்த மரத்தின் கீழ் பள்ளம் தோண்டி அதில் இறங்கி நீ கழுத்தளவு வரை மண்ணை நிரப்பி அரைமணி நேரம் இரு. வலி போய்விடும்,'' என்றான்.

கிழவியும், ''பரவாயில்லையே! காசு செலவு இல்லாமல் இப்படி ஒரு சிகிச்சை இருக்கிறதா! பேஷ். உன் பெயரையும் முகவரியையும் சொல். என் வலி போனதும் நான் அங்கு வந்து உனக்கு நன்றி செலுத்து கிறேன்,'' என்றாள்.

வேலனும் வழக்கம் போலக் குறும்பாக, ''என் பெயர் பாலன்.



மணலூரில் புதுத்தெருவில் வேப்ப மரத்திற்கு எதிரே என் வீடு உள்ளது,'' என்று கூறிச் சிரித்தான். பாலனோ இது வழக்கம்போல வேலன் செய்யும் குறும்பு என்று எண்ணி எதுவும் பேசவில்லை. அதன்பின் அவர்கள் இருவரும் அங்கிருந்து தலைநகருக்குச் சென்றார்கள்.

இதன் பின் பத்து வருடங்கள் கழிந்தன. ஒருநாள் பாலனும் வேல னும் மற்றும் சிலரும் தம் ஊர்ப் பிள்ளையார் மேடையில் கூடி நாட்டு நடப்பு பற்றிப் பேசிக் கொண்டு இருந்தார்கள்.

அப்போது வெளியூர்க்காரன் ஒருவன் அங்கு வந்து ''ஐயா! இந்த ஊரில் பாலன் என்பவரின் வீடு எங்கே இருக்கிறது?'' என்று கேட் டான். அப்போது பாலன், ''நான்தான்



பாலன். நீங்கள் யார் என்று தெரிய வில்லையே! என்ன விஷயமாக என்னைப் பார்க்க வந்திருக்கிறீர் கள்?'' என்று கேட்டான்.

அவனும், ''ஐயா! பனையூர் கிராம அதிகாரி என்னை அனுப்பியுள்ளார். எங்கள் ஊர் எல்லையில் வசித்து வந்த ஒரு கிழவி இறக்குமுன் தன் சொத்து எல்லாம் இவ்வூர் புதுத்தெருவில் வேப்ப மரத்திற்கு எதிரே உள்ள வீட்டில் வாழும் பாலனுக்கே சேர வேண்டும் என்று உயில் எழுதி வைத்தாள். அதனால் பாலனை எங்கள் ஊருக்கு அழைத்துப் போக வந்தேன். எங்கள் கிராம அதிகாரி கிழவி விட்டுப் போன சொத்தை முறைப்படி இவரிடம் ஒப்படைப் பார்,'' என்றான்.

அப்போது பாலனுக்கும் வேல னுக்கும் அந்தக் கிழவியின் வீட்டில் உணவு உண்டது நினைவிற்கு வந்தது. பாலனும் வேலனும் அந்த ஆளுடன் பனையூரை அடைந்து கிராம அதிகாரியைக் கண்டார்கள்.

அவரும் பாலனிடம், ''நீங்கள் கிழவியின் இடுப்பு வலி போக ஏதோ ஒரு சிகிச்சை முறையைக் கூறி னீர்களாம். அதன்படி அவள் செய் கையில் தன் வீட்டுப் புளிய மரத் தின் அடியிலிருந்து நிறைய தங்க நாணயங்களை அடைந்தாள். அந்த மரத்தின் கீழ் குழி தோண்டியபோது தான் ஒரு செப்புக் குடம் நிறையத் தங்க நாணயங்கள் அவளுக்குக் கிடைத்தன. உயிலின்படி இவற்றை உங்களிடம் ஒப்படைக்கிறேன்,''

எனக் கூறித் தங்க நாணயங்களை அவனிடம் கொடுத்தார்.

அப்போது பாலன் கிராம அதிகாரியிடம், ''ஐயா! பல ஆண்டுகளுக்கு முன் என்றோ ஒருநாள் நானும் இதோ என் நண்பன் வேலனும் அக்கிழவியின் வீட்டை அடைந்தோம். அப்போது எங்களுக்கு நல்ல பசி. உண்ண உணவு கிடைக்குமா என்று அவளிடம் கேட்டோம். கிழவியும் உடனே அடுப்பை மூட்டி சமையல் செய்து உணவை அளித்தாள். நாங்கள் சாப்பிட்டு முடித்ததும் அவள் தன் இடுப்பு வலி பற்றிக் கூறவே, என் நண்பன் கேலியாக குழி தோண்டி அதில் இறங்கிக் கழுத்து வரை மண்ணை நிரப்பி அரைமணி நேரம் இருக்கச் சொன்னான். கிழவி இவனது முகவரியைக் கேட்கவே குறும்பாக இவன் என் முகரியைக் கூறினான்,'' என்றான்.

கிராம அதிகாரியும், ''ஓகோ! இதுவா விஷயம். கிழவி தன் நோயைக் குணப்படுத்தியதற்காக வேலன் குறும்பாக பாலனின் முகவரியைக் கொடுத்தால் தன் பணத்தை பாலனின் பெயரில் எழுதி வைத்திருக்கிறாள். வேலன் மட்டும் இப்படிச் செய்யாமல் தன் முகவரியைக் கொடுத்திருந்தால் இந்தப் பணம் அவனுக்குக் கிடைத்திருக்குமே,'' என்றார்.

அப்போது வேலன், ''பாலா! அன்று வேடிக்கையாக சிகிச்சை என்று எதையோ சொல்லி விளையாட்டாக என் பெயர் பாலன் என்று அவளிடம் சொல்லி உன் முகவரியைக் கொடுத்தேன். நீயே பார்! என் அதிர்ஷ்டம் என் தவறான போக்கால் கைநழுவிப் போயிற்று,'' என்று புலம்பினான்.

பாலன் அவனைத் தேற்றி ''கவலைப்படாதே! நாம் இருவரும் சேர்ந்து தானே அந்தக் கிழவியைப் பார்த்தோம். உயிலின்படி அவளது பணம் எல்லாம் எனக்கே என்றாலும் அதில் பாதியை உனக்கு நான் தருகிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட வேலன் பெரும் மகிழ்ச்சியுடன், ''ஓ! நழுவிய அதிர்ஷ்டம் மீண்டும் வந்துவிட்டது,'' என்று கூறினான்.



# நம் இந்தியா

1. இந்தியப் புராணங்களின்படி தேவர்களின் குரு யார்?
   அ) சுக்கிராச்சாரியார்
   ஆ) துரோணாச்சாரியார்
   இ) பிரகஸ்பதி
   ஈ) வேத வியாசர்

2. தற்கால 'பை'யின் மதிப்பை கணித சாஸ்திரத்தில் முதலில் கண்டு பிடித்த இந்தியப் பேரறிஞர் யார்?
   அ) ஆரியபட்டர்
   ஆ) பவபூதி
   இ) வராகமிஹிரர்
   ஈ) பாஸ்கராச்சாரியர்

3. மிகப் பிரபல அமைப்பான 'பூசா' கல்விக் கழகம் எதனுடன் தொடர்பு படுத்தப்படுகிறது?
   அ) வானவியல்
   ஆ) கணிதம்
   இ) விவசாயம்
   ஈ) புள்ளி விவர இயல்



4. இப்படத்தில் உள்ளவர் வட இந்தியாவில் ஒரு பல்கலைக் கழகத்தை நிறுவியவர். இவர் யார்? அப்பல்கலைக்கழகம் எது?

5. தற்போது பெயர் பெற்ற பல்கலைக் கழகமாக உள்ள முன்னாள் தாமஸ் பொறியியல் கல்லூரி எது?
   அ) அண்ணா பல்கலைக்கழகம்
   ஆ) ஜாதவ்புர் பல்கலைக்கழகம்
   இ) ரூர்க்கி பல்கலைக்கழகம்
   ஈ) காகதீய பல்கலைக்கழகம்

6. இவர்களில் மனித இயல்பினை ஆய்வு செய்தவர் யார்?
   அ) டாக்டர் ஏ. லட்சுமணசுவாமி முதலியார்
   ஆ) டாக்டர் எல்.கே. அனந்த கிருஷ்ண அய்யர்
   இ) டாக்டர் அமர்த்தியா சென்
   ஈ) டாக்டர் ஆசுதோஷ் முகர்ஜி

*(விடைகள் அடுத்த மாதம்)*

## ஜூன் மாத வினாக்களின் விடைகள்

1. இ) டெக்கான் க்வீன்
2. அ) கோல்கும்பஜ்
3. இ) ஹைதராபாத்
4. சர். எட்மண்ட் ஹிலேரி, டென்சிங் நார்கேயுடன் 1953 மே 29ல் முதன்முதலாக எவரெஸ்ட் சிகரத்தில் ஏறியவர்.
5. படத்தில் காட்டியுள்ளபடி டீசல் அல்லது மின்னியங்கி என்ஜின்களால் இழுக்கப்படாது நிலக்கரி என்ஜினால் மேட்டுப் பாளையம். உதகமண்டல ரயில் பாதையில் ரயில் வண்டி இழுக்கப்படுகிறது.



# விநாயகர்

குகை வாயிலில் இருந்த பெரும் பாறையை ஒரு சிறு கல்லைத் தூக்கி எறிவது போலத் தன் துதிக்கையால் தூக்கிப் போட்டுவிட்டு யானை அதற்குள் போயிற்று. பிறகு ரத் தினங்கள் பதித்த தங்க நகைகளை பல கட்டுகளாகக் கட்டி அது குகைக்கு வெளியே கொண்டு வந்து சௌதாமினியிடம் கொடுத்தது. பல தங்க மாலைகளைத் தன் கழுத்து நிறையப் போட்டு மற்றவற்றை எடுத்துக் கொண்டு போகும்படியும் அந்த யானை அவளுக்கு சைகை செய்து ஆசீர்வதித்தது.

அவளும் நகைகளை அணிந்து மிகுந்ததை மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டபின் யானை அவளைத் தன் முதுகின் மீது ஏற்றிக் கொண்டு கல்யாணி நகரத்தின் எல்லையில் கொண்டு போய் விட்டு விட்டுத் திரும்பிக் காட்டிற்குள் சென்றது.

கண்ணைப் பறிக்கும் நகை களோடு தங்கச் சிலையே அசைந்து ஆடி வருவது போல சௌதாமினி வந்தது கண்டு அவளது மாமியார் கலககண்டி திகைத்துப் போனாள். பிறகு ஒருவாறாகச் சமாளித்துக் கொண்டு அந்த நகைகள் எல்லாம் அவளுக்கு எப்படிக் கிடைத்தன என்று கேட்டாள்.

சௌதாமினி கூறியதையெல்லாம் கேட்டுவிட்டு அவள் "ஓ! யானைக்கு விளாம்பழம் என்றால் மிகவும் பிடிக் குமா? சரி, சரி" என்று கூறி உடனே ஒரு பெரிய கூடையை எடுத்துக் கொண்டு சந்தைக்குப் போனாள். அது நிறைய விளாம்பழங்களை வாங்கிக்



கொண்டு அவள் வீடு திரும்பினாள்.

பிறகு ஒரு பெரிய சாக்குப் பை எடுத்து விளாம்பழக் கூடை மீது போட்டு அதனை எடுத்துக் கொண்டு கலககண்டி தன் மருமகள் கூறிய இடத்திற்குப் போய் ''யானையே, யானையே! ஓடோடி வா, யான் மகிழ நகைகளைக் கொண்டோடி வா!'' என்று பாட்டுப் பாடினாள்.

யானை வரவில்லை. ஆனால் காடே அதிரும்படி ஏதோ ஒரு மிருகம் உறுமும் சத்தம் கேட்டது. கலககண்டி தலை நிமிர்ந்து பார்த்தபோது ஒரு புலி குதித்து ஓடி வருவதைக் கண்டாள். பையைக் கீழே போட்டு விடாமல் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு கலககண்டி எடுத்தாள் ஓட்டம்.

ஓடி ஓடி அவள் ஓரிடத்தில் போய் பொத்தென்று விழுந்தாள். அதுதான் சௌதாமினி கூறிய குகை. அதுகண்டு அவள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

குகை திறந்துதான் இருந்தது. அவள் எழுந்து கிடுகிடுவென்று குகைக்குள் போனாள்.

அக்குகைக்குள் எங்கு பார்த்தாலும் நகைகள் குவியல்குவியலாக இருப்பது கண்டு பைத்தியம் பிடித்தவள் போலக் கத்திக் குதித்தாள். கழுத்திலும் கைகளிலும் இடுப்பிலும் கால்களிலும் எவ்வளவு நகைகளை அணிந்து கொள்ள முடியுமோ அவ்வளவுக்கும் எடுத்து அணிந்து கொண்டாள். பிறகு தான் கொண்டு வந்த சாக்குப் பை நிறையும்வரை நகைகளை அள்ளி அள்ளி எடுத்துப் போட்டுக் கொண்டாள்.

அந்த மூட்டையை கலககண்டி தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வந்தபோது குகை வாசல் மூடப்பட்டிருப்பதைக் கண்டு திகைத்தாள். அங்கு அனல் போன்ற கண்களோடும் அரிவாள் போன்ற கோரைப் பற்களோடும் பயங்கரச் சிரிப்பு சிரித்துக் கொண்டு நிற்கும் பிரம்மராட்சஸி யைக் கண்டு பயந்து நின்றாள்.

பிரம்மராட்சஸியும் ''ஓ! கலககண்டியா! நீ உன் மருமகளை ஆட்டி வைத்தவள் அல்லவா? நான் என் மாமியாரையே சித்திரவதை செய்த மருமகள். தெரியுமா என் கதை?'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

ஒரு காலத்தில் நான் மிக அழகாக இருந்தேன். எனக்கு கலஹம்சி என்ற பெயர் வைக்கப்பட்டாலும் கணவன் வீட்டிற்குப் போனதும் என் வாயா

டித்தனத்தைக் கண்டு கலகதுந்துபி என்ற பெயரை வைத்துவிட்டார்கள்! நீ எவ்வளவு கெட்ட மாமியாராக இருந்தாயோ அவ்வளவுக்கு என் மாமியார் மிகவும் நல்லவராக இருந்தார். பரம சாது.

நான் குடித்தனம் செய்ய வந்த மறுவருடமே என் கணவர் என் குணம் கண்டு சகிக்க முடியாமல் சொல்லிக் கொள்ளாமலேயே எங்கோ ஓடிவிட்டார். எனக்கோ நகைகள் என்றால் கொள்ளை ஆசை! நல்ல நெல்வயல்களை விற்று நகைகளைச் செய்து போட்டுக் கொண்டேன். என் மாமியாரும் தனக்கு ஒரு மூக்குத்தி கூட வைத்துக் கொள்ளாமல் தன் நகைகளை எல்லாம் எனக்கே கொடுத்துவிட்டார். அப்படியிருந்தும் நான் அவருக்குச் சரியாக சாப்பாடுகூடப் போடவில்லை. வீட்டு வேலைகளை எல்லாம் அவர் தலை மீதே சுமத்தினேன்.

பாவம்! இளைத்துப் போய் அவர் கடைசி காலத்தில் காசிக்குப் போயாவது கடவுளை தரிசித்துவிட்டு கங்கையில் உயிரைவிடலாம் என எண்ணி ஒரு மூட்டையை எடுத்துக் கொண்டு கிளம்பினார். என் மாமனாரும் தன் மனைவியோடு கிளம்பிவிட்டார். என் மாமியார் ஏதோ மூட்டைகளைக் கொண்டு போவது கண்டு கோபப்பட்டு அதை நான் வெடுக்கெனப் பிடுங்கிக் கொண்டேன். நான் இழுத்த இழுப்பில் நிலைதடுமாறி என் மாமியார் கீழே விழுந்து உயிரை



விட்டுவிட்டார். அதுகண்டு மாமனாரும் தன் மனைவியின் பிரிவு தாங்காமல் உயிரை விட்டுவிட்டார். இப்படியாக இருவரும் இறந்து கிடந்தார்கள்.

அந்த சமயம் தாடிக்காரப் பேர்வழி ஒருவர் அங்கு வந்தார். அவர் என்னைப் பார்த்து, ''நீ பிரம்மராட்சஸியாகித் திரி,'' என்று சபித்துவிட்டு இறந்து கிடந்த இருவரது உடல்களுக்கும் தகனக் கிரியைகளைச் செய்தார். அவர் தான் என்னைவிட்டுப் போன என் கணவர். என் அழகைக் கண்டு என்னை மணந்த அவர் என்னை இப்படியாகும்படி சபித்தார். அப்போதும் என் நகைப் பைத்தியம் என்னைவிட்டுப் போகவில்லை. கொள்ளைக்காரர்களுடன் கூட்டு சேர்ந்தேன். கொள்ளைக்கார ராட்சஸி என்ற பெயரும் பெற்றேன்.



இந்த குகையில் தான் கொள்ளைக் காரர்கள் தாம் கொள்ளை அடித்த நகைகளைச் சேர்த்து வைத்து வந் தார்கள். இவற்றை எல்லாம் நானே அடைய எல்லாக் கொள்ளைக்காரர் களுக்கும் உணவில் விஷத்தைக் கலந்து கொடுத்தேன். அவர்கள் இறக்குமுன் என்னை இந்த குகைக் குள் வைத்து இதன் வாயிலைப் பெரிய பாறாங்கல்லால் மூடிவிட்டே செத்தார்கள்.

கலககண்டி! என்னால் இந்த நகை களைக் காவல் காக்கத்தான் முடிந்தது, போட்டுக் கொண்டு எங்கேயும் போக முடியவில்லை. உனக்கு நல்ல புத்தி வரும்படி செய்தால் எனக்கு சாப விமோசனம் ஏற்படும் என்று இந்த குகைக்குள் வந்த யானை கூறியது.

யானை உன் மருமகளுக்கு கொடுத்த நகைகள் எல்லாம் அசல் தங்க நகைகளே. ஆனால் நீ அள்ளி எடுத்துக் கொண்டவைகள் எல்லாம் என்ன என்று மூட்டையை அவிழ்த் துப் பார்!'' இவ்வாறு பிரம்மராட்சஸி கூறியதும் கலககண்டி தன் தலை மீதிருந்த மூட்டையை இறக்கி அவிழ்த்துக் கொட்டினாள். பாம்பு களும் தேள்களும் நட்டுவாக்காளி களுமே அதிலிருந்து வெளி வந்து ஊர்ந்து குகையின் நாலாபுறமும் சென்றன.

அதுமட்டுமல்ல கலககண்டி அணிந்திருந்த நகைகளும் பாம்பு களாகவும் தேள்களாகவும் மாறி அவளது உடலைக் கொட்டின. வலி தாங்க முடியாது கலககண்டி குகையே எதிரொலிக்கக் கத்தினாள்.

பிரம்மாராட்சஸி பலமாகச் சிரித்து ''நீ உன் மருமகளைக் கொடுமைப் படுத்தினாய். நான் என் மாமியாரைக் கொடுமைப்படுத்தினேன். நம் போன்றவர்கள் பெண் குலத்திற்கே அவமானச் சின்னமாகும். உத்தம மான உன் மருமகளை நீ நல்ல விதமாக நடத்தப் போகிறாயா அல் லது இந்த குகையில் என்னைப் போல பிரம்மராட்சஸியாக ஆகி வாழ்நாள் முழுவதும் கழிக்கப் போகிறாயா? என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டது.

கலககண்டித் தன் கன்னத்தில் போட்டுக் கொண்டு ''எனக்கு புத்தி வந்தது. இனிமேல் என் மருமகளிடம் அன்புடன் நடந்து கொள்வேன். நான் இந்த குகையிலிருந்து வெளியே போனால் போதும். அதற்கு நீ வழி

செய். நீ சொன்னபடி எல்லாம் கேட்கிறேன்,'' என்று பிரம்மராட்சஸியிடம் கெஞ்சினாள்.

பிரம்மராட்சஸியும் கலககண்டியை குகையிலிருந்து வெளியே அழைத்துப் போய் காட்டைத் தாண்டி கல்யாணி நகர எல்லைக்குக் கொண்டு போய்விட்டாள்.

பிறகு அவள் ''எச்சரிக்கிறேன். ஜாக்கிரதை! நீ மட்டும் நான் சொன்ன படி நடந்து கொள்ளாவிட்டால் மறுபடியும் அந்த குகைக்குள் போய் பிரம்மராட்சஸியாகத் தான் இருக்க வேண்டி வரும். நினைவில் வைத்துக் கொள்!'' என்று கூறி அனுப்பினாள்.

கலககண்டியும் தப்பினேன் பிழைத்தேன் என்று தன் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தாள். அவள் சௌதாமினியின் கால்களில் வீழ்ந்து, ''அம்மா சௌதாமினி! என்னை மன்னித்துவிடு. நீயும் உன் கணவனும் சந்தோஷமாக வாழ்வதைவிட வேறு என்ன எனக்கு வேண்டும்? நான் செய்த கொடுமைகளை எல்லாம் மறந்து என்னை மன்னித்து விடு!'' என வேண்டினாள். தன் மாமியார் இப்படி மாற விநாயகரே காரணம் என்பது சௌதாமினிக்குத் தெரிந்துவிட்டது.

பாவனமிசிரர் இந்தக் கதையைக் கூறி ''அந்த குகையின் யானை யார் தெரியுமா?'' என்று கேட்க, சிறுவர்கள் எல்லோரும் ஒரே குரலில் ''விநாயகர் தாம். வேறு யாராக இருக்க முடியும்?'' என்றார்கள். இப்படியே அவர் பல கதைகளைக் கூறி சிறுவர்களின் மனதில் விநாயகர் மீது பக்தி ஏற்படும்படிச் செய்தார்.



ஒருமுறை ஒரு சங்கீத ரசிகர் ஒரு கோயிலில் உள்ள சித்திரத்தைக் காட்டி ''இதில் வீணை ஒருவர் வாசிக்க விநாயகர் களிநடம் புரிவதாக இருக்கிறதே. இதற்கு ஏதாவது கதை உண்டா?'' என்று பாவன மிசிரரிடம் கேட்டார். அவரும் ''ஆமாம். உள்ளது கூறுகிறேன்,'' எனக் கூறிக் கதையை ஆரம்பித்தார்.

வாதாபி நகரம் கலைகளில் சிறந்து விளங்கியது. இசை, ஓவியக் கலைஞர்கள் இங்கு தோன்றினர். கஜானன பண்டிதர் நகரில் முதலிடம் பெறுபவர். நல்ல அறிஞர். இசை ஞானம் அவருக்கு அபாரம். நன்கு பாடுவார். அவரது குரலே பிறரைக் கவர்ந்து இழுத்துவிடும் சக்தி பெற்றிருந்தது.

வாதாபி கணபதியின் மீது அவரே பல பாடல்களை இயற்றிப் பாடி இருக்கிறார். அவரது பேரன் பால கணேச பட்டன் அவர் பாடுவதற்குத் தக்கபடி தாளம் போட்டு வந்தான்.

கஜானன பண்டிதர் பல ராகங்களில் விநாகயரைப் புகழ்ந்து கீர்த்தனைகளை இயற்றிப் பாடி வரலானார். அவர் தனக்கு மதிப்பு, கௌரவம் முதலியன வேண்டும் என்று சற்றும் எதிர்பாராதபோதிலும் ஒவ்வொரு ஆண்டிலும் முதலில் தங்க கணபதி விக்கிரகம் அவரது இல்லத்திற்கே வரும். இதனால் வாதாபி நகரில் உள்ள ஒரு சிலருக்கு அவர் மீது பொறாமை ஏற்பட்டது. இவர்களில் ஸ்வரகேசரி என்ற பாடகர் ஒருவர்.

அவர் எப்போது பார்த்தாலும் கஜானன பண்டிதர் பாடுவதில் ராகம் தப்பு, தாளம் தவறு என்று ஏதாவது ஒரு குறையைச் சொல்லி வந்தார். அவர் தம் குரலைப் பலவிதத்திலும் திருப்பி வேகவேகமாக ஸ்வரம் போட்டுத் தாம் பெரிய வித்வான் எனக் காட்டிக் கொள்ள முயல்வார்.

ஒருமுறை ஸ்வரகேசரி ''இந்த ஆண்டு தங்க விநாயகர் விக்கிரகம் கஜானன பண்டிதர் வீட்டிற்குப் போகாமல் செய்துவிடுகிறேன் பார்!'' என எண்ணி அதற்கான ஒரு திட்டத்தையும் கூட போட்டு வைத்துக் கொண்டார். (தொடரும்)





# கிளி செய்த உதவி!

கந்தப்பன் ஓர் அப்பாவி. யார் என்ன சொன்னாலும் எதிர்த்துப் பேசாதவன். மிகவும் தாட்சணியம் பார்ப்பவன். ஏதோ நான்கு எருமை களை வைத்துக் கொண்டு பால் வியாபாரம் செய்து தன் மனைவி யுடனும் மகளுடனும் ஒரு சிறு வீட் டில் வாழ்ந்து வந்தான்.

அவனுடைய அடுத்த வீட்டுக் காரன் காளிமுத்து என்ற பணக்காரன். அவன் மனைவி காத்தாயி. காளி முத்துவும் காத்தாயியும் அப்பாவி கந்தசாமியிடம் தம் வேலைகளை எல்லாம் செய்யச் சொல்லி வந்தார் கள். அவனும் கொஞ்சமும் முகம் சுளிக்காமல் அவர்கள் சொன்ன வேலைகளை எல்லாம் செய்து வந்தான்.

கந்தப்பன் தன் மகளுக்குத் திரு மணத்தை நிச்சயித்தான். அதற்காக பட்டுப் புடவைகள் வாங்க அவன் காஞ்சிபுரத்திற்குக் கிளம்பினான். அதை அறிந்த காளிமுத்து "கந்தப்பா! என் மனைவிக்கும் ஒரு நல்ல பட்டுப் புடவையாகத் தேர்ந்து எடுத்து வாங்கி வா! அதன் விலையை நீ அங்கிருந்து வந்ததும் கொடுத்துவிடுகிறேன்," என்றான். கந்தப்பனும் அப்படியே செய்வதாகக் கூறிவிட்டுச் சென்றான்.

காஞ்சிபுரத்திலிருந்து பட்டுப் புடவைகளை வாங்கிக் கொண்டு கந்தப்பன் தன் வீட்டிற்குள் நுழைந் தான். அவன் பின்னாலேயே காளி முத்துவும் வந்துவிட்டான்.

கந்தப்பன் கொண்டு வந்த பட்டுப் புடவைகளை எல்லாம் அப்போதே காட்டச் சொல்லி அவற்றில் மிக நேர்த்தியாக இருந்ததை எடுத்துக் கொண்டு அவன் "இது என் மனை விக்குப் பிடிக்கும். இதை எடுத்துக்

- வெ. லாவண்யா -



கொண்டு போகிறேன். இன்று வெள்ளிக்கிழமை. அதனால் அவள் பெட்டியைத் திறந்து பணத்தை எடுத்துக் கொடுக்கமாட்டாள். நாளை உனக்குப் பணம் தருகிறேன்,'' என்று கூறிவிட்டுப் போய்விட்டான்.

மூன்று நாட்களாகியும் காளிமுத்து பணம் கொடுக்காததால் கந்தப்பன் அவன் வீட்டிற்குப் போய்த் தயங்கிய வாறே ''புடவை விலை ஐநூறு ரூபாயைக் கொடுத்தால் எனக்கு உதவியாக இருக்கும்,'' என்றான்.

அதைக் கேட்ட காளிமுத்து ஆத் திரம் கொண்டு உள்ளே போய் பட்டுப் புடவையை எடுத்து வந்து கந்தப்பன் முன் விட்டெறிந்து ''எடுத்துக் கொண்டு போ நீ வாங்கிக் கொண்டு வந்த புடவையை. இது என் மனைவிக்குப் பிடிக்கவில்லை,'' என்று கூறினான்.

கந்தப்பன் என்ன செய்வான் பாவம். புடவையுடன் வீட்டிற்குப் போய் நடந்ததைக் கூறவே, அவளும், ''சரி. உங்களுக்குத் தான் காஞ்சி புரத்துக் கடைக்காரரைத் தெரியுமே. புடவையை அவரிடம் திருப்பிக் கொடுத்துவிட்டு பணத்தை வாங்கிக் கொண்டு வாருங்கள். கல்யாண செலவுகளுக்கு வேண்டுமே!'' என்றாள்.

கந்தப்பனும் புடவையை எடுத் துக் கொண்டு விரைவில் காஞ்சி புரத்தை அடைய குறுக்கு வழியில் காட்டுப் பாதையில் சென்றான்.

நடுப்பகலாக இருந்தும் காட்டின் அப்பகுதி மரங்களால் அடர்ந்து ஒரே இருட்டாக இருந்தது. அங்கிருந்த ஒரு பெரிய ஆலமரத்தில் ஒரு பெண் பிசாசு தன் மகளுடன் வாழ்ந்து வந்தது.

அது கந்தப்பனைக் கண்டதும் ''யார் நீ? கொஞ்சமும் பயப்படாமல் என் இருப்பிடத்திற்கு வந்தாயா? உன்னை என்ன செய்கிறேன், பார்!'' என்று மிரட்டியது.

கந்தப்பனும் பயந்து நடுங்கிய வாறே தன் நிலைமையை விவ ரித்தான். அப்பெண் பிசாசும், ''உன் பெண்ணுக்குக் கல்யாணமா? எங்கே நீ எடுத்த பட்டுப் புடவையை எனக் கும் என் மகளுக்கும் காட்டு. அவளுக் கும் விரைவில் திருமணமாகப் போகிறது,'' என்று கூறித் தன் மகளை அங்கே வரும்படி அழைத்தாள்.

அதன் மகளும் வரவே இரு பிசாசுகளும் கந்தப்பன் காட்டிய

புடவையைப் பார்த்து ஒரேயடியாக மகிழ்ந்து போயின.

மகள் பிசாசு தன் தாயிடம், ''அம்மா! இந்தப் புடவையை நான் எடுத்துக் கொள்கிறேன். என் கல்யாணத்தில் நான் இதைத் தான் கட்டிக் கொள்வேன். இதன் விலையை இவருக்குக் கொடு!'' என்றது.

தாய்ப் பிசாசும் கந்தப்பனுக்கு ஐநூறு ரூபாய் கொடுத்து அந்தப் புடவையை வாங்கித் தன் மகளிடம் கொடுத்தது. அப்போது மகள் பிசாசு கந்தப்பனிடம் ''நான் சில வருடங்களாக ஒரு கிளியை வளர்த்துப் பேசக் கற்றுக் கொடுத்திருக்கிறேன். வரப் போகிற என் மாமியாருக்குக் கிளி என்றால் பிடிக்காது. அதனால் இதனை நீங்கள் கொண்டுபோய் வளர்த்து வாருங்கள்,'' என்று கூறிக் கிளியைக் கூண்டோடு கொடுத்தது. அவனும் அதை எடுத்துக் கொண்டு தன் ஊருக்குத் திரும்பிச் சென்றான்.

தெருவில் கந்தப்பன் வருவதைக் கண்ட காளிமுத்து அவனை அணுகி அவன் கையிலிருந்து கிளிக் கூண்டைப் பிடுங்கிக் கொண்டு ''ஆ! எவ்வளவு அழகான கிளி! எங்கே கிடைத்தது?'' என்று கேட்டான்.

கந்தப்பனும் காட்டில் நடந்ததைக் கூறவே காளிமுத்துவும் ''என்னால் தான் நீ காட்டிற்குப் போனாய். புடவை விலை உனக்குக் கிடைத்து விட்டது. அதனால் கிளி எனக்கு,'' என்று அடாவடி செய்து கிளியைக் கூண்டோடு தன் வீட்டிற்குக் கொண்டு போய்விட்டான்.



தன் கணவன் ஒரு கிளியைக் கொண்டு வருவதைக் கண்டு காத்தாயி ''இதென்ன புது விவகாரம்? கிளியைக் கூண்டில் அடைப்பது மகா பாவம்,'' என்றாள்.

காளிமுத்தோ, ''பாவமாவது? மண்ணாங்கட்டி. இந்தக் கிளி சாதாரணக் கிளி அல்ல. பேசும் கிளி. இதனால் நமக்கு ஏராளமாய்ப் பணம் கிடைக்கப் போகிறது,'' என்றான்.

''அது எப்படி?'' என்று காத்தாயி கேட்கவே, அவனும் ''அடுத்த வாரம் அரசகுமாரனின் பிறந்தநாளைக் கொண்டாடப் போகிறார்கள். அப்போது இந்தப் பேசும் கிளியை அரச குமாரனுக்குப் பரிசாகக் கொடுப்பேன். இந்த அதிசயக் கிளியைக் கண்டு மன்னன் ஆச்சரியப்படுவதோடு இதைப் பரிசாக அளித்த

எனக்கு நிறையப் பணம் கொடுப் பார்,'' என்றான். காத்தாயி ''இந்தக் கிளியைப் பேசச் சொல்லுங்கள்,'' எனவே, கிளியும் ''ஆஹா! என்ன என் அதிர்ஷ்டம். ஆ! என்ன சுகம் இது,'' என்றது.

அதுகேட்டு காத்தாயியுடன் காளி முத்துவும் திருப்தி அடைந்தான். கணவனும் மனைவியும் கிளியோடு தலைநகருக்குப் போய் அரசகுமார னின் பிறந்தநாள் விழாவில் கலந்து கொண்டார்கள். அவர்கள் மன்னனை வணங்கி தாம் பேசும் கிளியை இள வரசனுக்குப் பரிசளிப்பதாகக் கூறி கிளியை அரசகுமாரனின் பக்கத்தில் வைத்தார்கள்.

மன்னனும் வியப்படைந்து ''என்ன? இந்தக் கிளி மனிதனைப் போலப் பேசுமா? எங்கே பேச வை!'' என்றான். காளி முத்துவும் ''கிளியே! நீ பேசு. மன்னர் கேட்டு மகிழ வேண் டுமாம்,'' என்றான்.

கிளியும், ''ஆ! என்ன என் அதிர்ஷ் டம்! என்ன சுகம்! பிழைத்திருந்தால் மல்லிகை மணம். இறந்தாலோ நெய் மணம். உன் கன்னம் மாம்பழம் போல உள்ளது,'' என்று கூறி இரண்டே வயதான அந்த அரச குமாரனின் கன்னத்தைக் கொத்தி காயப்படுத்தி பறந்துவிட்டது.

இதனால் மன்னன் கடும்கோபம் கொண்டு காளிமுத்துவையும் காத் தாயியையும் கைது செய்து சிறையில் அடைத்தான். வைத்தியர் ஓடி வந்து குழந்தையின் காயத்திற்கு மருந்து தடவி சிகிச்சை அளித்தார்.

அமைச்சரோ, ''இது பகை மன்ன னின் செயல். பச்சிளம் குழந்தையைக் கொல்ல சதி. இதற்குக் கருவியாக இத்தம்பதிகள் பயன்படுத்தப்பட் டிருக்கிறார்கள்,'' என்றார்.

காளிமுத்துவும் காத்தாயியும் தாங் கள் நிரபராதிகள் எனக் கூறிக் கதறியும் மன்னன் அவர்களுக்கு ஒரு வருடக் கடுங்காவல் தண்டனை விதித்தான். தண்டனைக் காலம் முடிந்து அவர்கள் விடுதலை ஆனதும் தம் ஊருக்குப் போவது அவமானம் என எண்ணி வேறு எங்கோ போய்விட்டார்கள். கிளியின் உதவியால் கந்தப்பனுக்கு அவர்களால் ஏற்பட்ட தொல்லை களுக்கு ஒரு முடிவு ஏற்பட்டது.





# தவறை உணர்ந்தாள்!

மகாலட்சுமியைப் பெண் பார்க்க வந்த சேகர் அவளது குடும்பம் ஏழைப்பட்டது என்றாலும் அவள் கொஞ்சம் படித்திருக்கிறாளே என் பதற்காக அவளை மணந்து கொண் டான். சேகர் வசதியான குடும்பத்தில் பிறந்தவன். ஏழைக் குடும்பத்தில் பிறந்த மகாலட்சுமி பணக்கார வீட் டிற்கு வந்ததும் தலைகால் தெரி யாமல் நடந்தாள். தான் என்ன செய் தாலும் தன் கணவன் தட்டிக் கேட்க மாட்டான் என எண்ணி அவள் தன் மாமியாருடன் சண்டை போட்டு அவளை அவளது மூத்த மகளின் வீட்டிற்கு அனுப்பிவிட்டாள்.

சேகரும் அவளை விட்டுப் பிடிக் கலாம் என்றும் போகப்போக எல் லாம் சரியாகிவிடும் என்றும் எண்ணி னான். ஆனால் மகாலட்சுமியின் போக்கில் எவ்வித மாற்றமும் ஏற்பட வில்லை. மேலும் ஊதாரித்தனமாக செலவு செய்யலானாள்.

இதை சேகர் கண்டிக்கவே அவள் ''எனக்கு இந்த வீட்டில் என் இஷ்டப்படி செலவு செய்ய உரிமை இருக்கிறது,'' என்று துடுக்காகப் பேசினாள்.

சேகருக்குக் கோபம் வந்து விட்டது. அவன் உரத்த குரலில் ''நீ உன் மனதில் ஒரு ஜமீன்தாரரின் மகள் என்று நினைத்துக் கொண்டிருக் கிறாயா? உனக்குக் கல்யாணம் செய்து வைக்கக் கூட உன் தகப் பனாருக்குச் சக்தி இல்லை. உன் கல்யாணத்திற்காக நான் பணம் கொடுத்து உதவினேன். கல்யாண மான பின் உன் தந்தை உன்னைப் பார்க்க ஒருமுறையாவது வந்தாரா? அன்றாட சாப்பாட்டிற்கே ஆலாய் பறக்கும் உன் குடும்பத்தவரை எப் படிக் காப்பாற்றுவது என்று தான் அவர் விழித்துக் கொண்டிருக்கிறார். இந்த நிலையில் நீ உரிமை பற்றிப் பேசுகிறாயா?'' என்று கத்தினான்.

மகாலட்சுமியும், ''என்னைப் பற்றி என்ன வேண்டுமானாலும்

- எஸ். கௌரி -



சொல்லுங்கள். ஆனால் என் பிறந்த வீட்டைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசக் கூடாது. அதை நான் சகித்துக் கொள்ளமாட்டேன்,'' என்று பதிலுக்கு இரைந்தாள்.

சேகரோ, ''உன் குடும்பம் என்ன அப்படி உயர்ந்தது? பெரிய ஜமீன்தாரர் குடும்பமா? இல்லையே! அன்றாட சோற்றிற்குத் தாளம் போடும் குடும்பம் தானே. இது ஊர் அறிந்த ரகசியம்,'' என்று கேலியாகக் கூறினான்.

இதனால் சேகருக்கும் மகாலட்சுமிக்கும் இடையே பலத்த வாக்குவாதம் மூண்டது. முடிவில் சேகர் அவளைப் பிடித்து வீட்டிலிருந்து வெளியே தள்ளி, ''போய்விடு உன் பிறந்த வீட்டிற்கு. இனிமேல் இங்கு வராதே!'' என்று கூறி வாசல் கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே போய் விட்டான்.

அப்போது தான் அவளுக்குத் தனது உண்மையான நிலை என்ன என்பது புரிந்தது. தன் பிறந்த வீடு இருக்கும் அவல நிலையில் அவள் அங்கே போய் இருக்க முடியாது. எனவே யோசித்து அடுத்த தெருவில் உள்ள சேகரின் சிற்றப்பாவின் வீட்டிற்குப் போய் அவரிடம் நடந்ததைக் கூறினாள்.

அவரும், ''சரி, அவனை நான் சமாதானப்படுத்துகிறேன். ஆனால் நீ செய்தது தப்பு. அவனுடன் நீயும் உன் மாமியாரும் இருந்து நீகுடித்தனம் செய்தாலே உங்களுக்கு நல்லது. அப்படி இல்லாவிட்டால் ஊரார் கேலி செய்வதோடு உங்களிடையே பிளவை மேலும் அதிகப்படுத்துவார்கள். வா, உன் வீட்டிற்குப் போகலாம். நான் சேகரின் வீட்டின் முன்புறத்தில் இருந்து நடப்பதைக் கவனிக்கிறேன். நீ வீட்டின் பின்புறத்தில் இருந்து பார்!'' எனக் கூறி அவளைத் தன்னோடு கூட்டிக் கொண்டு கிளம்பினார்.

சேகரின் வீட்டில் நடந்த கணவன் மனைவி சண்டையைப் பார்த்த அடுத்த வீட்டு அகிலாண்டம் மகாலட்சுமி விரட்டப்பட்ட சற்று நேரத்திற்குப் பின் சில பாத்திரங்களில் சாதம், சாம்பார், அவியல், மோர் என்றெல்லாம் எடுத்துக் கொண்டு சேகரின் வீட்டிற்குள் நுழைந்தாள்.

அங்கு கவலையுடன் உட்கார்ந்திருந்த சேகரைப் பார்த்து, ''தம்பீ,

கவலைப்படாதே! உன் சகோதரி போல நான் இருக்கிறேன். நடந்ததை எல்லாம் பார்த்தேன். நீ பசியோடு இருப்பாய் என்று தான் இதைக் கொண்டு வந்தேன். எழுந்து வந்து சாப்பிடு!'' என்றாள். சேகருக்கும் நல்ல பசி. அதனால் அவன் எழுந்து சாப்பிட உட்கார, அகிலாண்டம் தட்டு வைத்து அதில் தான் கொண்டு வந்ததைப் பரிமாறினாள். சேகரும் சாப்பிட்டுவிட்டு எழுந்து கை கழுவிக் கொண்டு வந்தான்.

அப்போது அகிலாண்டம் மெது வாக, ''ஒரு விஷயம். நாளைக்கு என் மகளைப் பெண் பார்க்க பிள்ளை வீட்டுக்காரர்கள் வருகிறார்கள். என் மகளுக்கு இனிமேல் தான் நகைகள் செய்ய வேண்டும். நாளை பிள்ளை வீட்டார் என் மகளைப் பார்க்கும் போது அவள் கழுத்து மூளியாக இருந்தால் நன்றாக இராது. அதனால் மகாலட்சுமியின் தங்க அட்டிகை யைக் கொடு. அதை அவளுக்குப் போடுகிறேன். அவர்கள் பெண் ணைப் பார்த்துவிட்டுப் போனதுமே அதைக் கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன்,'' என்று குழைந்தாள்.

சேகரும் உடனே அறைக்குள் போய் பெட்டியிலிருந்த மகா லட்சுமியின் தங்க அட்டிகையைக் கொண்டு வந்து அகிலாண்டத்திடம் கொடுத்தான்.

அப்போது அவனது சிற்றப்பா திடுதிப்பென்று உள்ளே வந்து ''சேகர்! யார் இவள்? என் மகளின் அட்டிகையை எடுத்து இவளிடம்



ஏன் கொடுக்கிறாய்? கல்யாணத்தின் போது மகாலட்சுமியின் கழுத்து மூளியாக இருக்கக் கூடாதே என்று தான் என் மகளின் அட்டிகையை அவள் போட்டுக் கொள்ளக் கொடுத் தேன். இப்போது அதை வாங்கிப் போகவே வந்தேன். அதை வாங்கி என்னிடம் கொடு!'' என்றார்.

சேகர் திகைத்துப் போனான். அகிலாண்டம் எதுவும் பேசாமல் அட்டிகையை சேகரின் சிற்றப்பா விடம் கொடுத்துவிட்டுப் போனாள்.

அப்போது பக்கத்துவீட்டு பார்வதி அம்மாள் கையில் ஒரு பெரிய அடுக் கோடு வந்தாள். அவள் சேகரிடம், ''வீட்டில் அரிசியே இல்லை. அரிசி கொண்டுவரப் போன என் தம்பி கிராமத்திலிருந்து வரவில்லை. நாலு படி அரிசி கொடுங்கள். அவன் அரிசி

கொண்டு வந்ததும் திருப்பித் தந்து விடுகிறேன்,'' என்றாள்.

அப்போது வீட்டின் பின்புறத் திலிருந்து இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த மகாலட்சுமி உடனே உள்ளே ஓடி வந்தாள்.

அவள் பார்வதியம்மாவைப் பார்த்து, ''என்னம்மா இப்படி ஒரேயடியாகப் புளுகுகிறாய்? நேற்று உன் தம்பி அரிசி மூட்டை கொண்டு வந்து இறக்கியதை என் கண்ணால் பார்த்தேனே! நான் இல்லாத இந்தச் சமயத்தில் வந்து என் கணவரை ஏமாற்றப் பார்க்கிறாயா? அரிசியும் இல்லை, ஒன்றும் இல்லை. போ, போ!'' என்று கூறி விரட்டினாள். பார்வதியம்மாள் தலையைக் குனிந்து கொண்டு போய் விட்டாள்.

அப்போது சேகரின் சிற்றப்பா இருவரிடமும் ''வீட்டில் உங்களுக்கு வழிகாட்ட வயதான ஒருவர் இருந் தால் நீங்கள் தான் சண்டை போட்டுக் கொள்வீர்களா? உங்களை ஏமாற்ற அக்கம்பக்கத்தவர்கள் வருவார்களா? அகிலாண்டம் என்ன செய்தாள் என்று பார்த்தீர்களே! இரக்கப்பட்டு சாப்பாடு போடுபவள் போல வந்து மகாலட்சுமியின் தங்க அட்டிகை யைத் தட்டிக் கொண்டு போகப் பார்த்தாள். ஆனால் அவள் தான் வாங்கிப் போகும் அட்டிகையைத் திருப்பிக் கொடுக்கும் உத்தேசத்தில் இல்லை. அதுபோல கடன் என்று வாங்கிப் போகும் அரிசியைத் திருப் பிக் கொடுக்கும் எண்ணம் பார்வதி யம்மாவுக்கும் இல்லை. அவளும் என்ன நாடகம் ஆடினாள்! வீட்டில் அரிசி இல்லையாம், அரிசி கொண்டு வர கிராமத்திற்குப் போன அவளது தம்பி வரவில்லையாம். உங்கள் சண்டையால் யாருக்கு லாபம் என்று பார்த்தீர்களா? உங்களுக்கு இல்லை. யாரோ மூன்றாவது பேர்வழிக்குத் தான்,'' என்றார்.

மகாலட்சுமியும் ''மாமா! என் தவறு என்ன என்று தெரிந்துவிட்டது. இனி இவருடன் சண்டை போட மாட்டேன். நாளைக்கே போய் என் மாமியாரை அழைத்துக் கொண்டு இங்கே வந்துவிடுகிறேன்,'' என்று கூறினாள். அதைக் கேட்டு சேகர் மகிழ்ந்து போனான்.





# சூர்யா

மறைவாக வாழ்ந்த இளவரசனின் துணிகரச் செயல்கள்

அவன் தன் இளம் பருவத்தைக் காட்டில் பிராணிகளுடன் இருந்து சுகமாகக் காலம் கழித்தான். இளைஞனாக மானிடர்கள் இடையே அடி எடுத்து வைத்தபோது... அடுத்தடுத்து அவனுக்கு ஆபத்துகளாய் வந்தன! உயிருக்கே உலை வைக்கும் பயங்கர ஆபத்துகள்!!

இப்படி வந்தவை கானக மிருகங்களால் அல்ல! பயங்கர மனிதன் எனப்படும் மிருகத்தினாலேயே. சூர்யா வலிமை மிக்கவன். தைரியசாலி. எதிரிகளை கதறக்கதற அடித்து வீழ்த்தும் துணிச்சல் கொண்டவன். யார் இந்த சூர்யா? அதிசயமான, மறைவாய் வாழ்ந்த இளவரசன். அம்புலிமாமா ஆகஸ்ட் 2003 இதழில் தொடங்கும் 'மறைவாக வாழ்ந்த இளவரசனின் துணிகரச் செயல்கள்' என்ற புதிய சித்திரத் தொடரை (காமிக்ஸ்) படித்துப் பரவசப்படுங்கள்.

உங்கள் ஊர் ஏஜெண்டிடம்
இன்றே உங்கள்
பிரதிக்குப் பதிவு செய்து
கொள்ளுங்கள்.

S. Gandhi Ayya

# கேளிக்கை நேரம்




1

ஓஹோ! என் கையிலுள்ள மலரைப் போல இந்த ஏழு மலர்களில் எது உள்ளது என்று கூறுங்கள் பார்க்கலாம்!

2

கீழுள்ள இந்த இரு படங்கள் ஏழு விஷயங்களில் வேறுபடுகின்றன. அவை யாவை?





இந்த
இலைகளுக்குப்
பின்னால் சில
பிராணிகள்
மறைந்துள்ளன.
அவை யாவை?

3

நத்தையார் தன்
தின்பண்டத்தை
எடுத்துத் தின்ன
அவசரப்படுகிறார்.
நீங்கள் அதற்கு
வழியைக்
காட்டுங்கள்!

*(விடைகள் 78ம் பக்கத்தில்)*

4





வாக்கியம் உருவாக்குங்கள்

# போட்டோ வாக்கியப் போட்டி



M. Kameswara Rao



Mahantesh C. Morabad

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு செப்டம்பர் 2003 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

மே 2003 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :
எம். காவேரி,
B3-31, பெருமாள் கோயில் தெரு,
சைதாப்பேட்டை மேற்கு, சென்னை – 600 015.

பரிசு பெற்றவை



துள்ளிப் பாய்வதில் சந்தோஷம்
துல்லியமாய்ப் பார்ப்பதில் சந்தோஷம்

**கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 76-77)**

1. ஆறாவது எண் மலர்
2. ஏழு மாறுபாடுகள்: பட்டாசுகள், புலி வால், பாக்கட்டின் பித்தான், யானையின் பெல்ட், யானையின் காது, குள்ள நரியின் நாக்கு, ஷூ லேஸ்
3. பிராணி: யானை, சிங்கம், கங்காரு, கழுதை, மயில், வாத்து, கிளி, முயல், ஆடு, கழுகு, குள்ள நரி, மீன், மான், காகம்

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

